

# நம்மாழ்வார்

அ. சீனிவாச ராகவன்



இந்திய
இலக்கியச்
சிற்பிகள்

உள அட்டையில் காணும் சிற்பக் காட்சியில் பகவான் புத்தரின் அன்னை மாயாதேவி கண்ட கனவின் பலனை, மன்னர் சுத்தோதனனுக்கு நிமித்திகர் மூவர் விளக்குகின்றனர். அவர்களுக்குக் கீழே அமர்ந்து அந்த விளக்கத்தை எழுதுகிறார் ஓர் எழுத்தர். எழுதும் கலையைச் சித்திரிக்கும் முதல் இந்தியச் சிற்பம் இதுவாகவே இருக்கலாம்.

[நாகார்ஜுன் மலைச் சிற்பம் — கி.பி. இரண்டாம் நூற்றாண்டு.
படம் உதவி: நேஷனல் மியூஸியம், புதுதில்லி.]

இந்திய இலக்கியச் சிற்பிகள்

# நம்மாழ்வார்

மூலம் :

**அ. சீனிவாச ராகவன்**

தமிழாக்கம் :

**தம்பி சீனிவாசன்**



**சாகித்திய அக்காதெமி**

*Nammalvar* : Tamil Translation by Thambi Srinivasan of
A. Srinivasa Raghavan's monograph in English, Sahitya Akademi, New Delhi (1994), Rs.15.


First Published : 1994
ISBN-81-7201-389-2

**சாகித்திய அக்காதெமி**
**தலைமை அலுவலகம்**
இரவீந்திர பவன், 35, பெரோஸ்ஷா சாலை, புது தில்லி-110 001.

**விற்பனை**
'ஸ்வாதி' மந்திர் சாலை புது தில்லி-110 001.

ADA ரங்கமந்திர, 109, ஜே.ஸி. சாலை, பெங்களூர்-560 002.

'குணா பில்டிங்', 304-305, அண்ணா சாலை,
தேனாம்பேட்டை, சென்னை-600 018.

ஜீவன் தாரா பில்டிங், 4வது மாடி,
டைமண்ட் ஹார்பர் சாலை, கல்கத்தா-700 053.

172, பம்பாய் மராத்தி கிரந்த சங்கிரகாலய சாலை,
தாதர், பம்பாய்-400 014.

**விலை ரூ. 15**

Printed at : Udayam Offsets, Madras-600 002.

பொருளடக்கம்

# ஆங்கிலப் பதிப்புக்கு முன்னுரை

நம்மாழ்வாரை ஒரு ஞானபுருஷராகவும் அவரது அருட்செயல்களை வேதசாரமாகவும் போற்றுகிறார்கள் பக்தர்கள். அவரது பாசுரங்களுக்கு வேதாந்த பக்தி இயக்கப் பொருள் கொள்ளும் பணி ஏழு நூற்றாண்டுகளுக்கு முன்னரே தொடங்கிவிட்டது. அதன் பயனாக எழுந்த 'ஈடு' என்னும், வியாக்கியானங்கள் இன்று நம்மாழ்வாரின் வாக்குக்கு உள்ள பெருமையைப் பெற்று ''பகவத் விஷயம்'' என்று சிறப்பிக்கப்படுகின்றன. இது போன்ற ஒரு சிறு நூலில் அந்த வியாக்கியான கர்த்தாக்கள் உரைத்துள்ள சாரத்தை யெல்லாம் எடுத்துச் சொல்வது இயலாத செயலாகும். மேலும், பெரும்பாலும் தமிழர் அல்லாத வாசகர்களுக்கென்றே தயாரிக்கப் படும் இந்த இலக்கிய வரிசையில் அதற்கு அவசியமும் இல்லை. எனவே இந்த நூலில், வேதாந்தக் கருத்துக்கள் எனத் தகும் விவரங்கள் பற்றிக் குறிப்பிடாமல், சுருக்கமான பொதுப்படையான நோக்குக்கு எவை எவை தேவையோ அவற்றைப் பற்றி மட்டும் குறித்துள்ளேன்.

இங்குமங்கும் 'கூறியது கூறல்' என்னும்படி சில விவரங்கள் திரும்ப வரலாம். அது தவிர்க்க முடியாதது. தெளிவுற மொழிய அது தேவைப்பட்டது. அவ்வாறான பகுதிகள் அதிகம் இல்லை.

மொழிபெயர்ப்பைப் பற்றி ஒரு வார்த்தை. சொல்லுக்குச் சொல்லாக அமைப்பது என்றும் இல்லாமல், ஒரேயடியாக சுதந்திரமும் எடுத்துக்கொள்ளாமல், நடுநிலையில் அமைத்த மொழிபெயர்ப்பு இது. சொல்லவந்த கருத்துக்கு ஏற்ற பகுதிகள் மட்டுமே எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

நண்பர்கள் ஏ.என். மகரபூஷணம், கே. பட்சிராஜன் இருவரும் திருநெல்வேலி வழக்கறிஞர்கள். இவர்கள் எனது நூலின் கையெழுத்துப் பிரதியை முற்றும் படித்து பயனுள்ள ஆலோசனைகள் வழங்கினர். இருவருமே சிறந்த தமிழறிஞர்கள். நம்மாழ்வாரிடம் ஈடுபட்ட பக்தர்கள். இருவருமே மிகுந்த உதவி புரிந்துள்ளனர். மற்றொரு நண்பர் திருநெல்வேலி வழக்கறிஞர் ஏ.கே. கோபால் இந்த நூலின் முதல் தமிழரல்லாத வாசகர். படிக்கும்போது அவருக்குத் தோன்றிய கருத்துக்களும் சந்தேகங்களும் எனது நூலைச் செப்பனிட உதவின.

தூத்துக்குடி,
1.10.74

**அ. சீனிவாச ராகவன்**

1

# ஆழ்வார்கள்

தமிழ்நாட்டில் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டுக்கும் ஒன்பதாம் நூற்றாண்டுக்கும்[1] இடையில் நிகழ்ந்த மாபெரும் இந்து சமய மறுமலர்ச்சி இயக்கத்தின்போது தமிழ் மொழியின் ஒரு தன்மை வெளிப்பட்டது. பொதுமக்களிடம் சமய நம்பிக்கையை வலியுறுத்தும் வலுவான சாதனமாக விளங்கியதோடு, சமய மறுமலர்ச்சியின் முக்கிய அம்சமான பக்தி என்னும் இறை—அன்பை வெளிப்படுத்தும் அழகிய சாதனமாகவும் விளங்கியது பழகு தமிழ்.

தெற்கே, முன்னரே பரவியிருந்த பௌத்தமும் சமணமும் தமது சமயப்பிரசாரத்துக்குத் தமிழ் மொழியைப் பயன்படுத்தி வழிகாட்டியிருந்தன; மேலும், மணிமேகலை, சிலப்பதிகாரம், என்னும் இரண்டு காப்பியங்களைப் படைத்து, மொழியின் கவிதையாற்றலை வெளிப்படுத்தியிருந்தன. இந்து சமயம் இதனைத் தொடர்ந்தது, பௌத்தரும் சமணரும் முன்னரே வழிகாட்டியதால் அல்ல; சில ஆன்மிகப் பெரியோர்கள் தமது இறை அனுபவத்தை இயல்பாகத் தமது தாய்மொழியில் வெளியிட இயன்றதே காரணம். மறுமலர்ச்சி பெற்ற இந்து சமயம் இரண்டு பெரும் கிளைகளாகப் படர்ந்து, இரண்டும் தனித்தனியே வலுப்பெற்று, தனித்தன்மை கொண்டு, நாளடைவில் இரு வேறு சமயங்கள் என நிலைத்து விட பின்னர் ஒவ்வொன்றும் தனது மார்க்கமே தலைசிறந்தது என வற்புறுத்தும் சமய வாதங்களுக்கும் கசப்பான விவாதங்களுக்கும் இடமாயின. ஆன்மிக உணர்வு மலரும் காலங்களில் நேர்பவை தான் இவை யாவும். இந்து சமய விரிவின் இந்தக் காலத்தைச் சேர்ந்தவர்களே நாயன்மார்க்கும் ஆழ்வார்களும் ஆவர். [2] நாயன்மார்களோ சிவனடியார்கள்; ஆழ்வார்கள் வைணவத்தின் கவிஞர்கள்.

ஆழ்வார்கள் பன்னிருவர். பதினொரு பேர் இறைவனைப் பாடியுள்ளனர், மற்றவர், தமது ஆன்மீக குருவான நம்மாழ்வாரைப்

பாடியுள்ளார். ஆழ்வார்களின் காலவரிசை என்ன? இராமானுஜ சித்தாந்தப்படித் தெரிவது சர்ச்சைக்கு இடமளிப்பது, சரித்திர ஆராய்ச்சி கண்டு முடியாதது. வைணவ மரபுப்படி ஆழ்வார்கள் காலம் கி.மு. 4200க்கும் 2700க்கும் இடைப்பட்ட காலம். வரலாற்றியல் மொழிநூல், இலக்கிய ஆராய்ச்சியாளர் கருத்துப்படி அவர்கள் வாழ்ந்தது கி.பி. ஆறு முதல் ஒன்பது வரை நூற்றாண்டுகளில் ஆகும்.

ஆழ்வார்களின் வாழ்க்கை விவரங்களும் அவர்கள் அவதரித்த, மறைந்த ஆண்டுகள் யாவை என்பதும் காலப் பனிப் படலத்தில் மறைந்துவிட்டன. சில குறிப்புகளில் அவர்கள் அவதரித்த மாதங்களும் நட்சத்திரங்களும் காணப்படுகின்றன. வைணவ சம்பிரதாயப்படி நம்மாழ்வார் ஆழ்வார்களின் கால வரிசையில் ஐந்தாமவர். முக்கியத்துவத்தில் முதலாமவர். இவரைக் "குலபதி" எனப் புகழ்கிறது வைணவம்.[3] பிற ஆழ்வார்களை உறுப்புகளாகவும், நம்மாழ்வாரை உடலாகவும் கருதுகிறது. மக்களான ஜீவாத்மாக்களை உய்விப்பதற்காக பரமாத்மாவான இறைவனுடன் தூதுரைக்கும் நம்மாழ்வார் வழிபாட்டுக்குரியவர். நம்மாழ்வார் [நமது ஆழ்வார்] என்ற நாமத்தாலேயே இப்போது இவர் பெரிதும் அறியப்படுகிறார். இதனால் வைணவ உலகம் இவர் மீது காட்டும் பக்திமரியாதை புலப்படுகிறது.

நம்மாழ்வாரின் பாடல்களுக்கு சமஸ்கிருதமும் தமிழும் கலந்த மணிப்பிரவாளத்தில் விரிவான பேருரைகள் இயற்றப்பட்டுள்ளன. இவர் இயற்றிய பாடல்கள் அனைத்தும் ஸ்ரீராமானுஜ சித்தாந்தங்களுக்கு[4] இணையும்படி நிருபிக்க, கல்விமான்கள் விரிவாகப் பாடுபட்டு முயன்றுள்ளனர். இந்த உரைகள் கல்விப் பெருக்கும் சமய அறிவுக்கூர்மையும் இணைந்த சாதனைகள். இருந்தும், இந்த உரைகள் நம்மாழ்வார் வாக்கின் அடிப்படை மானுடத்தன்மையையும் அதை வெளிப்படுத்தும் கவிதை அம்சத்தையும் கவனிக்காமலில்லை. உரையாசிரியர்களின் ஆழ்ந்த கவனம் சமயத்தை ஒட்டியே இருந்தாலும், பாசுரங்களிலுள்ள குறிப்புகளையும் நுணுக்கங்களையும் அவர்கள் எடுத்துக் காட்டும் அழகே தனி. ஆயினும் அவர்களது முக்கிய நோக்கம் சமயக்கொள்கைகளே.

அவர்களது தொடக்கமே நம்மாழ்வார் ஒரு மகான் என்ற அடிப்படையில்தான். மெய்யொளியைத் தேடித் தவிக்கும் ஒரு மானுடனாக அல்ல; பிறவியிலேயே பக்குவமடைந்த அவதாரமாகவே அவரைக் கருதினார்கள். நம்மாழ்வாரைத் திருமாலின் ஓர் அம்சமாகவே கருதினார்கள். திருமாலின் அணுக்கத்தலைவரான *சேனைமுதலியின் மறுபிறப்பே நம்மாழ்வார் என்று கொண்டார்கள்.* அவரைத் திருமாலின் அவதாரமாகவே கொண்டாடவும் செய்தனர். இந்தக் கருத்தினை ஏற்றால் நம்மாழ்வாரின் திருவாக்கில் காணும் ஏக்கமும் அலைச்சலும் விசித்திரமாக இருக்கும்; பிறவியிலேயே பக்குவமடைந்த ஆத்மாவாக அவர் இருந்திருந்தால், தாம் இந்த நோக்கத்துக்காவே இறைவனிடமிருந்து மண்ணில் இறங்கியுள்ளோம் என்று தெளிவாக அறிந்திருந்தால், இறைவனோடு ஒன்ற இத்தனை ஏக்கமும் ஏன்? ஆண்டவனிடமிருந்து அகல்வதில் துக்கமும் ஏன்? இதற்கும் சமாதானம் கூறுகிறார்கள். நம்மாழ்வார் தெய்வாம்சம் படைத்தவர் ஆயினும் அவர் தாமே வலிய மானுடத் தன்மையைக் கைப்பிடித்துப் படிப்படியாக ஆன்மிக உயர்வினை அடையப் பாடுபடுகிறாராம், அடியார் குழாம் பின்பற்ற, அதாவது, இந்தக் கருத்துப்படி நம்மாழ்வாரின் பாசுரங்கள் வானத்தமரன் மானுடனாய் அவதரித்து அருளியவையே; அதில் காணும் நித்தியத்தை அடைய ஏங்கும் நீண்ட ஆன்மிக யாத்திரையின் ஆன்மிக அனுபவங்கள் எப்படிப்பட்டவை! எத்தனைப் போராட்டங்களைக் கடந்து மானுடன் சத்திய தரிசனத்துக்கு நடைபோட வேண்டியிருக்கிறது? இந்த எண்ணங்கள் யாவும் மனித மனத்தில் எழவில்லையா? மானுடனாக வந்த தேவனின் வாக்குத்தானா? இப்படிப் பார்த்தால் நம்மாழ்வாரின் அருளிச்செயல் யாவுமே பரமாத்மாவை நோக்கி விரையும் ஆன்மாவின் முன்னேற்றத்தைச் சித்திரிக்கும் நடைச்சித்திரங்களாகும்.

இது உண்மையாக இருக்கலாம். நம்மாழ்வாரின் வாக்கில் காணும் ஆழ்ந்த நாடகக் கவிதை அழகை *அவதார வாக்கு என்றோ*, கற்பனை அனுபவம் என்றோ சொல்லி ஒதுக்கிவிடமுடியாது. நம்மாழ்வாரின் வாழ்க்கையை மானுட வாழ்க்கையாகவும் ஆன்மிக முன்னேற்ற முயற்சியாகவும் நாம் கொள்வோம். அவர் மானுடராக வாழ்ந்த பருவம் அவர் இறுதியாக இறைவனை உணரும் முயற்சியில் ஓரளவு தடையாக இருந்தும் அவர் கலங்கவில்லை. இந்தக் கருத்தோட்டத்தில் பார்த்தால் நம்மாழ்வாரின் வாக்கு அனைத்திலும் தனிமனித மனத்தின் அனுபவங்களைக் காண்கிறோம். எத்தனை

சோதனைகள், தோல்விகள்! சாதனையும் வேதனையும்; நம்பிக்கைகளும் எத்தனை! யாவும் கடந்து இறுதியில் மனித நிலையை உயர்த்தி உயர்வுடன் ஒன்றும் அனுபவம். தாகத்துடன் தவிக்கும் தன்மைஒருமையான ஆன்மா 'சேஷம்' ஆகிறது. இறைவனைத் தவிர வேறு ஒன்றும் நாடாத பாத்திரமாகிறது. நம்மாழ்வாரின் திருவாக்கினை இந்தக் கருத்தில் பார்ப்பதால் பெரும் ஞானியான அவரது பெருமை குறைந்துவிடாது. மாறாக, ஒரு மனித உள்ளம் பெரும் ஞானியாக உருவானது எப்படி என்பதை முழுதும் உணர்ந்து பாராட்ட இயலும்; வெகு சாதாரணமான மானுடனின் பிடிப்பிலே சத்திய நித்தியப் பெருவெள்ளம் சிக்கும் என்பதையும் புலப்படுத்தமுடியும். இதிலேதான் நம்மாழ்வாரின் உண்மை உயர்வு விளங்குகிறது. அவரது கவிதையின் தனிவீச்சு, அவரது ஞானத்தன்மைக்கு மட்டுமல்ல, மானிட விதிக்கும் சாட்சியாக விளங்குகிறது. நம்மாழ்வாரின் உணர்ச்சிகள் மண்ணை மீறி விண்ணிலே மிதப்பவை என்பது உண்மைதான். ஆனால் அவை இந்த மண்ணிலேயே தோன்றியவை, இந்த மண்ணின் மொழியிலேதான் எழுந்தவை.[5] இதை மறுப்பது, நம்மாழ்வாரின் பாடல்கள் ஓர் அற்புதக் கவிக்கதறல் என்பதை மறப்பதாகும். அவரது கவிதையுள் காணும் குறியீடுகளையும் புராணக் கற்பனைகளையும் தத்துவக் கற்பனைகளையும் கடந்து தெளிவது இந்தக் கவிக்கூவல். இந்த நூல் இவ்வாறு அவரது கவிதையைக் காணும் முயற்சியே யாகும்.

---

1. சில ஆராய்ச்சியாளர் கருத்துப்படி இந்த மறுமலர்ச்சி நேர்ந்த காலப்பகுதி, ஆறாவது நூற்றாண்டு முதல் பத்தாம் நூற்றாண்டின் தொடக்கம் வரையுமாம். பௌத்தமும் சமணமும் இந்தக் காலத்தில் அடங்கி வந்தன என்றாலும் மறுபடி தலையெடுக்கக் கடைசிவரை முயன்றும் வந்தன.
2. ஆழ்வார்கள் என்றால் 'ஆழ்ந்தவர்கள்', அதாவது கடவுள் பக்தியில் ஆழ்ந்தவர்கள் என்பதாம். 'ஆளுவோர்' என்னும் பொருளிலும் இந்தச் சொல் கல்வெட்டுக்களில் சில அரசபரம்பரை மேன்மக்களைக் குறிக்கப் பயன்பட்டுள்ளது.
3. மெய்யொளி கண்ட மகான்களின் குலத்தின் அதிபதி.

4. இந்த உரைகள் பன்னிரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் பதிமூன்றாம் நூற்றாண்டிலும் ஸ்ரீராமாநுஜர் காலத்திற்குப் பின்னர், நம்மாழ்வார் காலத்துக்கு மூன்று நூற்றாண்டுகளுக்குப் பின்னர், இயற்றப்பெற்றவை. ஒன்று மட்டும் ஸ்ரீராமானுஜர் காலத்திலேயே இயற்றப்பெற்றது.

5. 'பூமி குமாரனுக்கு மண்ணின் ஸ்பரிசம் எப்போதுமே எழுச்சியூட்டும் அனுபவமாம் – உயர் பௌதிக ஞானம் விழையும் பொழுதிலும் கூட. உயர்பௌதிகத் தன்மையை உண்மையிலேயே முழுமையாக எட்டவும் சாதனை படைக்கவும் நாம் பௌதிக நிலையில் காலை ஊன்றியபடி இருக்கவேண்டும். உபநிடத வாக்குப்படி, ஆன்மாவே அகிலமாக விரியும் எனினும் மண்ணே அவனது பாதபீடம்' – ஸ்ரீ அரவிந்தர்.

# 2

## நம்மாழ்வாரின் வாழ்க்கை

எல்லா ஆழ்வார்களின் சரிதங்களைப் போலவே, நம்மாழ்வாரின் சரிதம் பற்றி அறியப் பயன்படும் முக்கிய நூல்கள் இரண்டே. ஒன்று, ஸ்ரீராமாநுஜரின் சமகாலத்தவரான கருடவாகன பண்டிதர் சம்ஸ்கிருத மொழியில் இயற்றிய 'திவ்யசூரிசரிதம்' ; மற்றது பின்பழகிய பெருமாள் ஜீயர் சம்ஸ்கிருதமும் தமிழும் கலந்த மணிப்பிரவாள நடையில் இயற்றியுள்ள 'குருபரம்பராப்ரபாவம்' [ஆறாயிரப்படி] என்ற நூல். நம்மாழ்வாரின் வாழ்க்கை வரலாற்றைத் தெரிவிக்கும் வேறு சில நூல்களும் உள்ளன. ஸ்ரீமணவாளமாமுனிகளின் 'உபதேசரத்தினமாலை'; ஸ்ரீவேதாந்ததேசிகரின் 'தேசிகப் பிரபந்தம்'; பிரம்மதந்திர ஸ்வதந்ர ஜீயரின் மூவாயிரப்படி 'குருபரம்பராப் பிரபாவம்'; ஸ்ரீ அனந்தாசார்யாவின் 'பிரபந்தநாம்மிருதம்' ; ஸ்ரீ கந்தாடையப்பனின் 'பெரிய திருமுடி அடைவு'; ஸ்ரீரங்கம் திருக்கோயிலின் வரலாற்றை விவரிக்கும் 'கோயிலொழுகு' போன்ற நூல்கள்.

மாறன் என்ற பெயருடன் அவதரித்த நம்மாழ்வார் பகவானின் சேனைமுதலியார் அம்சம். இவருக்குச் சடகோபன், பராங்குசன் என்னும் பெயர்கள் உண்டு. மாறனின் தந்தை காரியாார் திருநெல்வேலிச் சீமையில் தாமிரபரணிக்கரையிலுள்ள திருக்குருகூர் என்னும் ஊரினர். திருக்குருகூரில் ஆதிநாதப் பெருமாள் திருக்கோவில் அருகே ஒரு புளிய மரத்தின் கீழே மாறன் உணவின்றி நீரின்றிக் கண்மூடிக் கிடந்தவாறு தமது வாழ்வின் முதல் பதினாறு பிராயத்தைக் கழித்தாராம். இந்தப் புளியமரம் நாராயணன் பள்ளிக்கொள்ளும் ஆதிசேஷனின் அம்சமாகக் கருதப்படுகிறது. இவருக்குப் பின்னர்ச் சீடராக வந்து சேர்ந்த மதுரகவி என்பவர் இவரைப் பார்த்து ஒரு கேள்வி கேட்டபோதுதான் மாறன் கண்விழித்து, முதலில் பேசினார். "செத்ததின் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?" என்ற மதுரகவியின் வாக்குக்கு "அத்தைத் தின்று அங்கே கிடக்கும்" என்று பதில்

அளித்தாராம் நம்மாழ்வார். இதுவே அவர் பதினாறு ஆண்டுகளில் வாய்திறந்து பேசிய முதல் பேச்சு.

இதற்குப் பின்னரும் கூட நம்மாழ்வார் புளியமர நிழலை விட்டு அகலவில்லை. அங்கேயே இருந்தபடி தமது பாசுரங்களை இயற்றிவந்தார். நூற்றெட்டு திவ்ய தேசங்களின் மூர்த்திகளும் திருக்குருகூர் எழுந்தருளி இவருக்குத் தரிசனம் அளித்தனராம். தமக்கு விதிக்கப்பட்ட பணியான நான்கு பிரபந்தங்களையும் இயற்றி முடித்ததும் இவருக்குப் பரமபதத்திலிருந்து அழைப்பு வந்துவிட்டதாம். பகவானின் திருவடியை அடையத்தானே இவர் வாழ்நாள் முழுதும் ஏங்கிவந்தார்.

இந்த வாழ்க்கைச் சுருக்கத்திலிருந்து தெரிவது ஒன்றே: நம்மாழ்வாரின் இந்த மண்ணில் வாழ்ந்த காலத்துச் சாமானிய தினசரி வாழ்க்கை விவரங்கள் எதுவுமே எந்தப் பின்னணியிலும் நமக்குக் கிடைக்கவில்லை என்பதே. அவரது காலத்துக்குச் சில நூற்றாண்டுகள் கழித்து முதல் முதல் அவரைப் பற்றிச் சம்ஸ்கிருதத்தில் எழுதப்பட்டது. அந்த நூலிலே குறிப்பிட்டிருப்பதைப் பார்த்தால் அன்றைக்கு நாலாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு நம்மாழ்வார் வாழ்ந்ததாகக் காண்கிறது. இதெல்லாம் சமய நம்பிக்கையில் ஊறிய மரபுவழி வரலாறுகள். இந்த வரலாறு இயற்றப்பட்ட காலத்தில் நம்மாழ்வாரைத் தென் தேசத்தவர்கள் ஓர் ஆழ்வாராகவும், ஏன் ஆழ்வார்களின் ஆழ்வாராகவும் ஏற்றுக்கொண்டு விட்டார்கள். இவரது திருவாக்கிலே மனிதனுக்கு உய்வு கிடைக்கும் என்றும் ஏற்றுக்கொண்டாகிவிட்டது, அப்போது.

நம்மாழ்வாரின் வாழ்க்கை விவரங்கள் என ஏதேனும் உண்டா என்று நவீன வாழ்க்கைவரலாற்றாசிரியர்களும் வரலாற்று ஆராய்ச்சியாளர்களும் தேடத் தேட அவர்கள் ஏதும் புலப்படாது வெறும் வெளியில் நிற்கிறார்கள். உண்மை வாழ்க்கை விவரங்களைக் காலம் விழுங்கிவிட்டது. இப்போது கிட்டுவதெல்லாம் புனிதசரிதமாக்கப்பட்ட 'திவ்யசூரிசரிதம்' மற்றும் 'குருபரம்பராப்பிரபாவம்' தரும் விவரங்களேயாம். குறைநிறைகளுடன் எல்லாவிவரமும் அடக்கி, வாழ்க்கைவரலாறு எழுதப்படவேண்டும் என்னும் தற்காலப் பாணிக்கு ஏற்றதல்ல இந்த அணுகுமுறை. ஆயினும், உள்ளத்தின் ஆன்மீக வாழ்வைப் பொருத்தவரை இது

சரியே — நம்மாழ்வாரின் திருவாக்கிலே திரும்பத் திரும்ப வெளிப்படும் அனுபவங்கள் கொண்ட வாழ்க்கை என்னுமிடத்து இது சரியே.

மரபுவழி வரலாற்றுப்படி நம்மாழ்வார் பல ஆண்டுக்காலம் பேச்சின்றிக் கிடந்தார், உலகப்பற்று ஏதும் இன்றி இருந்தார். இந்த நிலை உலகெங்கும் காணும் தத்துவக் கவிஞர்கள் பலரின் அனுபவத்தை ஒட்டியதே ஆகும். நாம் இப்படிக் கொள்ளலாம். அவரது வாழ்வின் முதல் ஆண்டுகள் 'உள்ளே ஒளிந்த இறைவன் ஒருவனைத் தேடும் பெரு முயற்சியான ஆன்மீக சோதனையில் கழிந்தது. இந்த ஒருமுனைப்பாடு மிக்க சிந்தனை இவருக்குப் பிறவியிலேயே வாய்ந்த திருவருள். இவரது வாழ்வின் அற்புதமே இங்குத்தான் தெரிகிறது. இந்த ஆழ்ந்த உள்நிறையிலிருந்து மீண்டதும் இவர் பேரருளைத் தொட்டு அனுபவித்து விட்டார். இவரது அருள்வாக்குகள் இந்த நிறையினையும் இறைவனை நோக்கி மேற்கொள்ளும் யாத்திரையில் படிப்படியான பல பருவங்களையும் விவரிக்கின்றன. இவரது வாக்குப்படி இந்த யாத்திரையின் முக்கிய நிறையாக உலகப்பற்று அறுத்து விலகுதலே ஆரம்பப்படியாகும். தகுந்த பொருள் ஒன்றைத் தேடுதலின் தொடக்கமாகும்; வழியில் கவியும் இருள்; அதன் திடீர் விலகல்; அதன் திடீர் திருப்பம், தேடலில் காணும் தீவிர ஆர்வமும் வேதனையும்; தேடுவது கிடைத்தபின் வரும் ஆனந்தம் — என்று ஒருவர் அனுபவிக்கும் எல்லாவகை உணர்ச்சிகளும் கொண்டது இந்த யாத்திரை.

நம்மாழ்வார் தமது வாழ்வின் முதல் பதினாறு ஆண்டுகளுக்குப் பின்னரே வாய்திறந்து பேசினார் என்பதாலும், இந்த மௌன ஆண்டுகளே அவர் ஆன்மிகத் தேடலில் கழித்த காலம் என நாம் கருதினால், அவரது திருவாக்குகளில் சில அவரது நினைவுகள் எனக் கொள்வோம். அவர் வாழ்வைத் திரும்பிப் பார்த்துப் படைத்தவை எனக் கொள்வோம்; அவருக்கு நேர்ந்த புது அனுபவங்கள் எனக் கொள்வோம். ஆங்கிலக் கவிஞர் வொர்ட்ஸ்வொர்த் வாக்கினைச் சற்று மாற்றி, "இந்த அருள்வாக்குகள், பரிபூர்ண நிலையினை உணர்ந்த மனநிறைவில் எழுந்த நினைவுக்குறிப்புகள்" என்போம். ["மனஅமைதிநேரத்தில் நினைவுகூர்வதான உணர்ச்சியே கவிதை' என்பது வொர்ட்ஸ் வொர்த்தின் கூற்று.]

# 3

# நம்மாழ்வார் அருளிச்செயல்கள்: திருவிருத்தம்

நம்மாழ்வார் இயற்றிய பாசுர நூல்கள் நான்கு: [1] திருவிருத்தம்; [2] திருவாசிரியம்; [3] பெரிய திருவாந்தாதி; [4] திருவாய்மொழி. 'சிறந்த', 'புனிதமான', 'தெய்வீக' என்ற பொருளில் ஒவ்வொரு நூலுக்கும் அமைந்துள்ள 'திரு' என்னும் அடைமொழி சேர, அந்தந்தப் பாவினமான 'விருத்தம்' 'ஆசிரியம்' என்னும் பெயரும் கொண்டு விளங்குவன முதல் இரண்டு நூல்கள். அந்தாதி வகையில், அதாவது முன் பாசுரத்தின் இறுதிச் சொல்லமைப்பு அடுத்த பாசுரத்தின் தொடக்கமான அமைந்த 'சிறந்த' நூலே "பெரிய திருவந்தாதி". நம்மாழ்வாரின் வாய்மொழி, நான்காவது நூலான "திருவாய்மொழி" ஆகிறது – சிறந்த தெய்வீக இலக்கியமாக.

## திருவிருத்தம்

நான்கு அடிகளால் ஆன நூறு பாசுரங்கள் கொண்ட நூலாகும் திருவிருத்தம். ஒவ்வொரு செய்யுளும் 'கட்டளைக் கலித்துறை' என்னும் ஐந்து சீர் கொண்ட நான்கு அடிகள் நிறைந்த தனிப் பாவினத்தில் புனையப் பெற்றது. நான்கு அடிகளிலும் முதல் அசையில் எதுகை அமைந்திருக்கும். 'விருத்தம்' என்றால் அது ஒருவகைப் பாவினம் என்பதோடு, 'செய்தி' அல்லது 'நிகழ்ச்சி' என்ற பொருளிலும் வரும். இந்த நூலில் நம்மாழ்வார் குறிப்பிடும் நிகழ்ச்சி அல்லது செய்தி, தாம் இறைவன் மீது காதல் கொண்டுவிட்டதைத் தெரிவிப்பதே என்று கருதவேண்டும்.

இந்த நூலில் முதல் பாசுரம் இதைக் குறிக்கிறது;

> பொய்ந்நின்ற ஞானமும், பொல்லா ஒழுக்கும்,
> அழுக்கு உடம்பும்,
> இந்நின்ற நீர்மை இனியாம் உறாமை
> உயிரளிப்பான்,
> எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்
> இமையோர் தலைவா!

மெய்ந்நின்று கேட்டருளாய், அடியேன் செய்யும் விண்ணப்பமே.

[திருவிருத்தம் 1]

கடவுள் மீதுள்ள பக்தியை மண்ணுலகத்து மானுடனுக்கும் மடந்தைக்கும் உள்ள காதலைப் போல, ஒரு காதல் நாடகமாக, அதற்கேற்ற நாடக உத்திகள் கொண்டு அமைந்த கவிதை இது. இந்த உருவகத்தில் கடவுளிடம் காதல் கொண்டு அவனைக் காணவிழையும் பெண்ணாக மனித ஆன்மா தன்னைக் கருதிக்கொள்கிறது. இறைவனே, எல்லாருக்கும் ஆன சிரஞ்சீவிக் காதலன். இந்தப் பாடலில், பல செய்யுட்களில் நம்மாழ்வார் இறைவன் மீது கொண்டுள்ள தீராத வேட்கை, காதல்வயப்பட்ட பெண்ணின் இதயத்தைக் கொண்டு வெளிப்படுகிறது.

"குழல்—கோவலர் மடப் பாவையும், மண்மகளும், திருவும்
நிழல் போல்வனர் கண்டு நிற்கும்கொல், மீளும்கொல்—தண்
அம்துழாய்
அழல்போல் அடும் சக்கரத்து அண்ணல், விண்ணோர் தொழ, கடவும்
தழல்போல் சினத்த அப்புள்ளின் பின் போன தனி நெஞ்சமே?'

[திருவிருத்தம் 3. – பிரிவு ஆற்றாத தலைவி நெஞ்சு அழிந்து உரைத்தல்]

இறைவனுக்கு நெருங்கிய வாகனமாகிய கருடன், எப்போதும் உடன் உறையும் திருமகள், கிருஷ்ண அவதாரத்தில் எப்போதும் பிரியாதிருந்த நப்பின்னை – இவர்கள் போல, என்னை விட்டுப் போய் மனமே, நீயும் அந்தத் துளசிமாலை அணிந்த சக்ரதாரியிடமே தங்கிவிட்டாயா?

மண்மகளும் திருமகளும் நம்பின்னையும் எம்பெருமானின் புகழோடு ஒன்றிவிட்டவர்கள். அவர்களைப்போல தாமும் நெருக்கமாக இருக்கவேண்டும் என்ற ஆர்வத்தையே இந்தப் பாடலில் புலப்படுத்துகிறார்.

குளிர்காலம் வருகிறது. வானில் கரிய மேகங்கள் சூழ்கின்றன. இது கார்காலம்தானா?

'ஞாலம் பனிப்பச் செறுத்து, நல் நீர் இட்டு, கால் சிதைந்து,
நீல வல் ஏறு பொராநின்ற வானம் இது; திருமால்
கோலம் சுமந்து, பிரிந்தார் கொடுமை குழறு தன் பூங்
காலம் கொலோ? அறியேன் – விளையாட்டியேன்
காண்கின்றவே!

திருவிருத்தம் 7 [கால மயக்கு]

காட்சி மாறுகிறது. காதல் வயப்பட்ட பெண் மழை மேகங்கள் எவ்வாறு தன் தெய்வீகக் காதலனுடைய கரும்பட்டு நிறத்தைக் கொண்டன என்று வியப்பை வெளிப்படுத்துகிறாள்.

"மேகங்களோ! உரையீர்—திருமால் திருமேனி ஒக்கும்
யோகங்கள் உங்களுக்கு எவ்வாறு பெற்றீர்? உயிர் அளிப்பான்
மாகங்கள் எல்லாம் திரிந்து, நல் நீர்கள் சுமந்து, நும்—தம்
ஆகங்கள் நோவ வருத்தும் தவம் ஆம் அருள்பெற்றதே?

[திருவிருத்தம் 32—தலைவி போலி கண்டு உரைத்தல்]

உயிர் காப்பது நீர். அது கொண்டது மேகம். சுமை எவ்வளவு பாரமானாலும், தூரம் எத்தனை அதிகமானாலும் நோவு எவ்வளவு ஆனாலும் பாராட்டாமல் மழை கொண்டுவருகின்றன மேகங்கள். அது ஒரு தவம். இறைவன் கருணையால் இதன் பயனாக அவனது நிறமான கரும்பட்டு நிறம் அடைந்தனவோ மேகங்கள்!

'இறைவனது வண்ணத்தைப் பெற இந்த மேகம் என்ன தவம் செய்துள்ளது!' என்று வியக்கும் தலைவிக்கு நீல அல்லி மலர்கள் கடவுளின் வண்ணத்தைப் பெற ஒற்றைக்காலில் தவம் இயற்றுவதாகவே தோன்றுகிறது.

'கடம் ஆயினகள் கழித்து, தன் கால் வன்மையால், பல நாள்
தடம் ஆயின புக்கு, நீர்நிலை நின்ற தவம் இது கொல்
....... பெருமாள் உரு ஒத்தன நீலங்களே!

[திருவிருத்தம் 38—தலைவனைப் பிரிந்த தலைவி போலி கண்டு. மகிழ்தல்]

காதல் பெருக்கில் பார்க்கும் இடமெல்லாம் தன் காதலன் பரந்தாமனின் கமலக் கண்களையே அவள் காண்கிறாளாம்;

'நீலத் தடவரைமேல் புண்டரீக
நெடுந்தடங்கள்
போலப் பொலிந்து, எமக்கு எல்லா
இடத்தவும்—பொங்குமுந்நீர்
ஞாலப் பிரான், விசும்புக்கும் பிரான்,
மற்றும் நல்லோர் பிரான்,
கோலம் கரிய பிரான், எம் பிரான்,
கண்ணின் கோலங்களே'

[திருவிருத்தம் 39 — தலைவனது உருவெளிப்பாடு கண்ட தலைவி
தோழிக்குக் கூறுதல்]

"மண்ணுலகத்துக்கும் விண்ணுலகத்துக்கும் நாயகன், நல்லவர்களின் நாயகன் என் நாயகன், அவன் திருக்கண்கள் நீண்ட நீலமலைச் சிகரங்களிடையே பூத்த தாமரை போன்று பொலிவன" என்று நினைத்துக்கொள்கிறாள். கூடவே, "கண் மட்டுமா. கையும் தாமரை. காலும் தாமரை!" என்று கூவுகிறாள்.

கண்ணும் செந்தாமரை; கையும் அவை;
அடியோ அவையே!

திடீரென்று ஒரு சந்தேகம் வந்துவிடுகிறது. 'எந்தத் திறனும் இல்லாத நான் எல்லாம் நிறைந்த இறைவனின் எழிலைப் பேசப்போமோ' என்று ஒரு சந்தேகம். தொடர்கிறாள்.

'கண்ணும் செந்தாமரை; கையும் அவை:
அடியோ அவையே!
வண்ணம் கரியது ஓர் மால் வரை போன்று,
மதி விகற்பால்
விண்ணும் கடந்து, உம்பர் அப்பால் மிக்கு,
மற்று எப்பால் எவர்க்கும்
எண்ணம் இடத்ததுவோ
எம்பிரானது எழில்நிறமே?

[திருவிருததம் 43 தலைவனது உருவெழில் உரைத்த தலைமகனது கூற்று]

"மிகச் சிறந்த ஞானிகளாலும் முடியாத செயலாயிற்றே" என்று அவள் கருதுகிறாள். தன் இறைவனின் பெருமை அவ்வளவு உயர்ந்தது என்று நினைத்துப் பார்ப்பதிலேயே ஒரு பெருமை! ஆனால் கூடவே, அதனை விவரிக்கமுடியாத தனது இயலாமையைக் குறித்தும் வருத்தம்;

'நிறம் உயர் கோலமும், பேரும் உருவும்
இவை இவை என்று
அறம் முயல் ஞானச் சமயிகள் பேசிலும்,
அங்கு அங்குஎல்லாம்
உற உயர் ஞானச் சுடர் விளக்காய்
நின்றது அன்றி, ஒன்றும்
பெற முயன்றார் இல்லையால்
எம்பிரான் தன் பெருமையையே.

[திருவிருத்தம் 44—தலைவி தலைவனது பெருமை உரைத்தல்]

"ஞானமும் தருமமும் நாடும் பெரியவர்கள் கூட இறைவன் நிறத்தையும் அழகையும் திருநாமத்தையும் பேருருவத்தையும் இப்படி இருக்குமோ என்று விவரிக்க முயலுவாரே அன்றி, அந்த நிலைமையை எட்டியவர் உண்டோ!" என்கிறாள். அதாவது ஞானமும் தவமும் கூடப் போதா, இறை நிலையை எட்ட அன்பு ஒன்றே வழி என்ற கருத்து இந்தப் பாடலில் புதைந்திருக்கிறது.

அவள் அன்பிலே கரைகிறாள். ஆனால் அவன் வரவில்லையே. தனிமை பெரும் வேதனை தருகிறது. இந்த நேரத்தில் மேற்குவானில் இருள் சூழ்ந்து, பிறை நிலவு தோன்றுகிறது. இரவின் வாடை வீசுகிறதாம்:

'பால் வாய்ப் பிறைப் பிள்ளை
ஒக்கலைக் கொண்டு பகல் இழந்த
மேல் பால் திசைப் பெண் புலம்பறு மாலை
உலகு அளந்த
மால்பால் துழாய்க்கு மனம் உடையார்க்கு
நல்கிற்றை எல்லாம்
சோல்வான் புகுந்து, இது ஓர்
பனிவாடை துழாகின்றதே.

[திருவிருத்தம் 35—தலைவி மாலைக்கு ஆற்றாமல் வாடை கண்டு இரங்குதல்]

"என் பிரபு எனக்கு வழங்கியுள்ள பேற்றினால் அவன்மீது காதலை வெளியிட முடிகிறது. இந்த வாடைக்காற்று அந்த வாய்ப்பைக் கூடப் பறித்துவிட முயல்கிறதே!" என்று காதலி ஏங்குவதாக இந்தப் பாசுரத்துக்கு வியாக்கியானம் சொல்வதுண்டு.

காதலில் சிக்கிய பெண் கூறுகிறாள். "இந்தக் காற்று தண்மையாக இல்லை. இரக்கமற்ற இந்தக் காற்று என்னை எரிக்கிறது. கண்ணுக்குத் தெரியாத இது எந்த உருவத்தில் வருகிறதோ தெரியவில்லை. அதன் அடிச் சுவடு தெரியவில்லை. ஆனால் அது அவதூறு பரப்புகிறது. தொடர்ந்து என்னை வாட்டுகிறது."

[திருவிருத்தம் 41—வாடைக்கு வருந்திய தலைமகளது கூற்று.]

கரிய இரவு நேரம் நீண்டுகொண்டே போகிறது. காதலியை அலைக்கழிக்கும் இரவு 'கங்குல்—ஆயிரம் ஊழிகள்' போல நீள்கிறது.

[திருவிருத்தம் 70]

அப்போது மெல்ல எழுகிறது பிறை நிலவு. அவளைத் தேற்ற வந்ததோ? 'சூழ்கின்ற கங்குல் சுருங்கா இருளின் கருந் திணிம்பைப் போழ்கின்ற திங்கள் அம்பிள்ளை' [திருவிருத்தம் 72] என்னும்படி அடர்ந்து நெருக்கும் இருளினின்று காக்க வந்ததோ நிலவு? இருக்கட்டும். ஆனால் இதுவும் சுடுகிறதே!

சோலையிலே அன்றில் பறவை சோகக்குரலில் அலறுகிறது. கடலோ கரையை ஓயாமல் உடைக்க முயன்று இரவெல்லாம் அவளைத் துன்புறுத்துகிறது.

புலம்பும் கன குரல் போழ் வாய அன்றிலும்,
பூங் கழி பாய்ந்து
அலம்பும் கன குரல் சூழ் திரை ஆழியும்...

[திருவிருத்தம் 87—அன்றிலுக்கும் ஆழிக்கும் ஆறறாத தலைவிக்கு தோழி இரங்குதல்]

"எனது சங்கு வளைகளைக் கழற்றச் சொல்லுகிறதோ இந்தக் கடல்? என்று வேதனையுடன் வினவுகிறாள். "பாற்கடலைக் கடைந்த போது அமுதம் கொடுத்துவிட்டு, அதை மீண்டும் பெறமுடியாமல் இப்போது துடிக்கிறதோ?" [திருவிருத்தம் 51] என்று வியக்கிறாள். இரவு முடிந்து பொழுது புலர்ந்ததும் மலை நடுவே உதிக்கும் ஆதவனைப் பார்த்து, தனது காதலனே தன் முன்னே நிற்பது போல மகிழ்ச்சியடைகிறாள்; தீயன யாவும் இடர்கள் யாவும் முடிந்துவிட்டது போல மகிழ்கிறாள்; 'திருமால் தலைக்கொண்ட நங்கட்கு எங்கே வரும் தீவினையே?' [திருவிருத்தம் 88].

இது ஒரு கணம்தான். ஆண்டவனை விட்டு அகன்று கிடக்கும் நினைவு உடனே உறுத்த, அவள் கதறுகிறாள். "எப்போது அடைவேன் அவனை? எப்போது?" என்று ஏங்குகிறாள்.

'தலைப்பெய்து யான் உன் திருவடி
சூடும் தகைமையினால்,
நிலைப்பெய்த ஆக்கைக்கு நோற்ற இம்
மாயமும் மாயச் செவ்வே
நிலைப்புஎய்திலாத நிலைமையும்,
காண்தோறு அசுரர்குழாம்
தொலைப்பெய்த நேமி எந்தாய்!
தொல்லை ஊழி சுருங்கலதே.

[திருவிருத்தம் 90 —
தலைவனைப் பிரிந்த தலைவி காலத்தின் நீட்டிப்புக்கு ஆற்றாது, உரைத்தல்]

தீமையையும் தீயவரையும் களையவல்ல சக்கராயுதத்தானிடம் [நேமி எந்தாய்] முறையிடுகிறாள்.

அவளது நம்பிக்கை உறுதியாக இருக்கிறது. அவளது மனமே அவனைத் தவிர வேறு எதையும் நாடாது. 'பெருங் கிறியானை யல்லால் அடியேன் நெஞ்சம் பேணலதே.' [திருவிருத்தம் 91.] அவளது ஏழை நெஞ்சமோ முரண்டுகிறது. பின் அவளைக் கைவிடுகிறது.'

'மடநெஞ்சம் என்றும், தமது என்றும், ஓர் கருமம் கருதி,
விட நெஞ்சை உற்றார் விடவோ அமையும்; அப் பொன்பெயரோன்
தட நெஞ்சம் கீண்ட பிரானார்—தமது அடிக்கீழ் விடப் போய்,
திட நெஞ்சம் ஆய், எம்மை நீத்து, இன்றுதாறும் திரிகின்றதே.'

[திருவிருத்தம் 46—நெஞ்சைத் தூதுவிட்ட தலைவி இரங்குதல்]

நெஞ்சத்தை மீட்க அன்னத்தையும் வண்டானம் என்னும் பறவையையும் தூது விடுகிறாள்.

'அன்னம் செல்வீரும், வண்டானம் செல்வீரும் தொழுது இரந்தேன்;
முன்னம் செல்வீர்கள் மறவேல்மினோ: கண்ணன் வைகுந்தனோடு
என் நெஞ்சினாரைக் கண்டால், என்னைச் சொல்லி, அவரிடை நீர்
இன்னம் செல்வீரோ?—இதுவோ தகவு? என்று இசைமின்களே?

[திருவிருத்தம் 30 — தலைவி அன்னங்களையும் வணடானங்களையும் தூது வேண்டுதல்]

பறவைகளிடமிருந்து ஒரு பதிலும் இல்லை அவளுக்கு. மேகத்தைப் பார்க்கிறாள். மேகங்களாவது உதவிசெய்யும் என நினைக்கிறாள்;

"இசைமின்கள் தூது என்று இசைத்தால்
இசையிலம், என் தலைமேல்
அசைமின்கள் என்றால், அசையும் கொலாம்
அம் பொன் மா மணிகள்
திசை மின் மிளிரும் திருவேங்கடத்து
வன் தாள் சிமயம்
மிசை மின் மிளிரிய போவான்,
வழிக்கொண்ட மேகங்களே?

[திருவிருத்தம் 31—
தூது செல்லாத மேகங்களைக் குறித்துத் தலைவி இரங்குதல்]

"மின்னல் ஒளி ஏந்தி ஒளிரும் திருவேங்கட மலை நோக்கி விரையும் மேகங்களே, என்னைப் பற்றி அவனுக்கும் செய்தி சொல்வீர்களா?" என்று வேண்டுகிறாள். அவ்வாறு செய்ய இயலாத மேகங்கள் எனது குனிந்த தலைமீது மிதித்துப் போக நான் வேண்டினால் இசையலாம்.

இவ்வாறு பல பாசுரங்களில் நம்மாழ்வார் இறைகாதலை வெளிப்படுத்துகிறார். இந்தப் பாசுரங்களில் காதலும் தலைவியாகச் சித்திரிக்கப்படுவது நம்மாழ்வாரே. [பராங்குசநாயகி என்று உரையாசிரியர்கள் குறிப்பிடுவது மரபு.]

இந்தப் பாடல்கள் சித்திரிக்கும் நாடகக் காட்சிகளில் வேறு சில பாத்திரங்களும் உள்ளனர். நம்மாழ்வார் அவர்களைப் பெயரிட்டுக் குறிப்பிடாவிடினும் பாடல்களிலுள்ள பேச்சும் நாடகச் சூழ்நிலையும் அவர்கள் யார் எவர் என்பதைத் தெளிவாக்குகின்றன. காதலால் தவிக்கும் பெண்ணாகிய முக்கிய பாத்திரத்தைத் "தலைவி" அல்லது "நாயகி" என்று பொது மரபுப்படி கொண்டால், நாடகத்திலுள்ள பிற மாந்தர்களாவன: நாயகியின் தோழியும் பணிப்பெண்ணுமாக இருப்பவள், நாயகியின் தாய், செவிலித்தாய், காதலன், காதலனின் நண்பன், மற்றும் ஒரு கட்டுவிச்சி. நாயகியை ஏதோ பிடித்துக்கொண்டுவிட்டது என்ற கவலையில் குடும்பத்தினர் இந்தக் கட்டுவிச்சியிடம்தான் ஆலோசனை கேட்கிறார்கள். தோழிக்கு என்ன வேலை? நாயகியுடன் அனுதாபமாக இருப்பதும் அவளுக்கு ஆறுதல் கூறுவதும் அவளது ஏக்க நிலை பற்றி விமரிசிப்பதுமேயாகும். அவள் கூறுகிறாள், கேட்போம்.:

"பனிப்பு இயல்வாக உடைய தன் வாடை
இக் காலம் இவ் ஊர்
பனிப்பு இயல்வு எல்லாம் தவிர்ந்து, எரி வீசும்;
அம் தண்ணம் துழாய்ப்
பனிப்புயல் சோரும் தடங் கண்ணி மாமைத்
திறத்துக்கொலாம்
பனிப் புயல் வண்ணன், செங்கோல்
ஒருநான்று தடாவியதே!

[திருவிருத்தம் 5 வாடைக்கு நலிந்த தலைவியின் மாமை கண்டு, தோழி இரங்குதல்]

"மழை மேகம் திசை மாறுவது போல, தங்கள் தலைவனின் செங்கோல் இன்று திசை தடுமாறிவிட்டதா என்ன? இயல்பாகக்

குளுமையாக வீசவேண்டிய காற்று உடலை எரிக்கிறதே! துளசியின் மீது இதயத்தை நாடவிட்ட எனது நாயகியின் கண்ணிலே கண்ணீர் மழை போலப் பொழிகிறதே!."

இந்தத் தோழிக்கு, தனது நாயகியின் நிலையினால் ஏற்படும் கோபம், தலைவனே எதிரில் இருப்பது போலப் பேச வைக்கிறது!

இறையோ இரக்கிலும், ஈங்கு ஓர் பெண்பால்
எனவும் இரங்காது,
அறையோ என, நின்று அதிரும் கருங்கடல்;
ஈங்கு இவள்—தன்
நிறையோ இனி, உன் திரு—அருளால் அன்றிக்
காப்பு—அரிதால்;
முறையோ—அரவு—அணைமேல் பள்ளிகொண்ட
முகில் வண்ணனே?

[திருவிருத்தம் 62 —
தலைவனின் ஆற்றாமையைத் தோழி தலைவனுக்குக் கூறுதல்]

"நீ என்ன இறைவன்! எங்கள் நாயகியின் நிலையைப் பாராய், இவள் ஒரு பெண் என்ற இரக்கமும் இல்லாமல் கருங்கடல் அதிர்கிறது. இவளது வேதனை அதிகமாகிறது. உனது திருவருள் தவிர வேறு எதுவும் இவளை மீட்டு முடியாது" என்று அரவணைமேல் பள்ளிகொண்ட முகில் வண்ணனை விளிக்கிறாள் தோழி. இவளே, நாயகியிடம், அவளது தலைவனின் பெருமையையும் எல்லையற்ற பரிவையும் விளக்குகிறாள். மண்ணுலகில் அவதரிக்கவைத்த பரிவே, நாயகியின் நிலை கண்டும் அருள்செய்யும். அவள் உய்வள், என்கிறாள்;

துஞ்சா முனிவரும் அல்லாதவரும் தொடர நின்ற
எஞ்சாப் பிறவி இடர் கடிவாள், இமையோர் தமக்கும்,
தன் சார்வு இலாத தனிப் பெரு மூர்த்தி—
தன் மாயம் செவ்வே
நெஞ்சால் நினைப்பு அரிதால் — வெண்ணெய் ஊர் என்னும்
ஈனச் சொல்லே.'

[திருவிருத்தம்—98—
தலைவனது அருமை நினைந்து கவல்கிற தலைவிக்குத் தோழி கூறுதல்]

"கண்துயிலாமல் தவம் இயற்றும் முனிவர்களும் மற்றவரும் தமது பிறவித் துயர் அற இவனை நாடுகிறார்கள். தேவர்களும் அறிய ஒண்ணாத பெருமான் இவன். அதனால் கலங்காதே. அவனது மாயம்

பெரிதே. நினைத்துப் பார்க்க முடியாத செயல்களைச் செய்துவிடுவான் இவன்—மண்ணுலகில் இறங்கி, வெண்ணெய் திருடும் ஈனச் செயலும் செய்பவன் ஆயிற்றே!"

நாயகியின் செவிலித்தாய்க்கு ஒரே வியப்பு. இந்தச் சின்னப் பெண், அனுபவமற்ற பேதை, இப்படிக் காதல் வயப்பட்டுவிட்டாளே! இந்த விசித்திர மோகத்தைப் பற்றி ஊரும் உலகமும் என்ன பேசுமோ என்று கிழவி அங்கலாய்க்கிறாள்:

முலையோ முழு முற்றும் போந்தில:
மொய் பூங் குழல்குறிய;
கலையோ அரை இல்லை; நாவோ குழறும்;
கடல் மண் எல்லாம்
விலையோ என மிளிரும் கண்; இவள் பரமே பெருமாள்
மலையோ திருவேங்கடம் என்று கற்கின்ற வாசகமே?

[திருவிருத்தம் 60—தலைமகளின் இளமைக்குச் செவிலி இரங்குதல்]

"என்ன இது. மார்பு இன்னும் பெரிதாகவில்லை இந்தப் பெண்ணுக்கு. கரிய கூந்தல் வளரவில்லை, நன்றாகச் சேலை உடுத்தவரவில்லை. குழந்தை போல இருக்கிறாள். எப்படி மின்னுகிறது இவள் கண், மண்ணும் கடலும் முழுதும் இதற்கு ஈடாமோ? இப்படிப்பட்ட குழந்தை கேட்கிறதே, எப்படி? 'திருவேங்கடமலை பெருமாள் மலையா?' என்று கேட்கிறதே, எப்படி?" என்று வியக்கிறாள்.

நாயகியின் தாய் படும் கவலை வேறு. இந்தப் பெண் காதலனுடன் அவன் நகரத்துக்குப் புறப்பட்டுப் போகிறாளே. வழியில் என்னஎன்ன இடர்கள் இருக்கும்! கொடியவர் நடமாடும் கொடிய பாலைவனம் வருமே, அவர்கள் பறை அதிருமே — என்றெல்லாம் அவள் கவலைப்படுகிறாள்.

[திருவிருத்தம் 37]

இது விசித்திரமான கவலை. காதலனுடன் போவதைத்தான் நாயகி விரும்புகிறாள். அதற்காகவே ஏங்குகிறாள். திருவிருத்தத்தின் எஞ்சிய பகுதிப்படி இது இன்னும் நேரவில்லை. நாயகி, காதலனுடன் சென்றுவிட்டிருந்தால், பின்பகுதியில் கட்டுவிச்சியை அழைப்பது ஏன்? நாயகியின் நிலைபற்றி குறிகேட்பதும் எதற்கு? கட்டுவச்சி நாயகியின் நிலையைக் கண்டு இவளது நோய் காதல் நோய்தான் என்று தெளிவாக்குகிறாள். அமரர் தலைவன் மீது எழுந்த காதல் நோய்க்கு மருந்து அவன் அணியும் துளசிமாலையே என்கிறாள்.

"வார் ஆயின முலையாள் இவள்; வானோர் தலைமகன் ஆம் சீர் ஆயினதெய்வ நல் நோய் இது; தெய்வத் தண் அம் துழாய்த்தார் ஆயினும், தழை ஆயினும், தன் கொம்பு—அது ஆயினும், கீழ் வேர் ஆயினும், நின்ற மண் ஆயினும், கொண்டு வீசுமினே.

[திருவிருத்தம் 53 – கட்டுவிச்சி கூறுதல்]

இந்தக் கவிதையில் காதல்நாயகன் தலைகாட்டுவதும் விசித்திரமான நிலையில்தான். இறுதியில் ஒரு பாசுரத்தில்தான், அதுவும். [திருவிருத்தம் 26. *இதனை ஆழ்வார் பக்திப்பரவசத்தில் காணும் தெய்வீக காட்சியாகவும் கொள்ளலாம்.*] அந்த ஒரு பாசுரம் காதல்நாயகன் தலைவியுடன் பாலையைக் கடக்கும்போது பாலைப் பரப்பைக் கண்டு அஞ்ச வேண்டாம் என்றும், போய்ச் சேரவேண்டிய நகரம் அருகேதான் இருக்கிறது என்றும் ஆறுதலாகக் கூறும் பாசுரமாகும். மற்றொரு பாசுரத்தில் நாயகன் தனது காதலி தனக்காக வாடிக் காத்திருப்பது அறிந்து தனது தேரோட்டியை விரைந்து செல்லுமாறு ஏவுவதை விவரிக்கிறது. [திருவிருத்தம் 50]

மற்றொரு பாசுரத்தில் நாயகன் நாயகியின் தோழியின் முன் எதிர்ப்பட்டு, தான் வேட்டையாடிவந்த யானை அவ்வழியே வந்ததா என்று அறிய முயலும் பாவனையில் சில கேள்விகளைக் கேட்க, அவள் விடை அளிக்காமலிருக்கிறாள். [திருவிருத்தம் 22] இன்னுமோர் பாசுரத்தில் நாயகன் தனது காதலியின் கூந்தல் மணத்தைப் பாராட்டி வண்டுகளை விளித்து அவற்றின் அனுபவத்தில் அது போல இனிதாய் எங்கும் கண்டதுண்டா என வினவுகிறான். [திருவிருத்தம் 55]. நாயகன் தனது தோழனுடன் பேசுவதாக மற்றொரு பாசுரம் [திருவிருத்தம் 57]. "தனது நாயகியின், கடலைப் போன்று அகன்று அழகிய கரிய விழிகளைக் கண்ட பின் அவள் மீது மையல் கொள்வதைப் பற்றி எவர்தான் வியப்படைவார்?" என்று பேசுகிறான். நாயகனின் தோழன் தானே சென்று நாயகியைக் கண்டுவந்த பின் நாயகனிடம் பேசுவதாக மற்றொரு பாசுரம் [திருவிருத்தம் 94]. நாயகனது காதல் கண்மூடித்தனமானது என்று இத்தனை நாள் தான் நினைத்திருந்ததுதான் பேதைமை என்று ஒப்புக்கொள்கிறான். [இந்தப் பாசுரத்துக்கு வியாக்கியானம் செய்துள்ள சிலர், இது நாயகியின் கூற்று எனவும், இத்தனை காலமாக தெய்விகக் காதலனை நேரே அறியாது, காதால் கேட்டதை வைத்தே பேசியதாகவும் ஆழ்வார் தெரிவிப்பதாகவும் கொள்கிறார்கள்].

ஆன்மா இறைவனுடன் ஒன்றுபட ஏங்கும் தத்துவத்தை உருவகப்படுத்தும் நாயக நாயக பாவங்கள் எளிமையாய், ஆதிகாலம் தொட்டு அடையாளபூர்வமாக இருப்பது. ஆனால் இப்பாசுரங்கள் வேறு பல பாத்திரங்களை, அறிமுகப்படுத்தி அவர்களுக்கு வாய்ப்பும் வாக்கும் கொடுத்திருப்பதாலே திருவிருத்தம், குழப்பமில்லை யாயினும் ஓரளவு சிக்கலாக அமைந்துள்ளது. தமிழ்ச் செய்யுள் இலக்கிய மாணவர்கள் பார்வையில் இவை சங்க காலக் காதல் கவிதைகளைப் போலத் தோன்றலாம். ஆயினும் தெய்விகக் காதலனும் நாயகியும் இறைவனாகவும் மனித ஆன்மாவாகவும் இருப்பதை இப்பாசுரங்கள் தெளிவாக்குவனவாக இல்லை.

திருவிருத்தத்தின் இறுதியில் நம்மாழ்வாரே இந்த பாவனையை அறுத்துவிடுகிறார்:

'எழுவதும், மீண்டே படுவதும், பட்டு, எனை ஊழிகள் போய்க்
கழிவதும், கண்டு கண்டு எள்கல் அல்லால், இமையோர்கள் குழாம்
தொழுவதும் சூழ்வதும் செய் தொல்லை மாலைக் கண்ணாரக் கண்டு,
*கழிவது ஓர் காதல் உற்றார்க்கும் உண்டோ—கண்கள் துஞ்சுதலே?'*

[திருவிருத்தம் 97—தலைவன் பிரிவில் துயில் கொள்ளாத தலைவி இரங்குதல்]

யுகயுகமாகப் பிறப்பும் இறப்புமாக இருக்கும் பொருளற்ற இந்த நிலை கண்டு சிரிப்பது தவிர வேறு என்ன செய்வது? இதனை முடிக்க ஒரே வழி, தேவர்களும் தொழும் தேவதேவனையே மணாளனாகக் கொண்டு உய்வதேயாம். இப்படிக் காதல் கொண்டார்க்குத் தூக்கம் என்பது *ஏது?*

மற்றொரு பாசுரத்தில் ஆழ்வார் இறைவனை நாயகனாகப் பார்க்காமல், தாய்தந்தையாகவே காண்கிறார்.

யாதானும் ஓர் ஆக்கையில் புக்கு, அங்கு ஆப்புண்டும், ஆப்பு அவிழ்ந்தும்,
மூது ஆவியில் தடுமாறும் உயிர், முன்னமே; அதனால்,
யாதானும் பற்றி, நீங்கும் விரதத்தை நல் வீடு செய்யும்
மாதாவினை, பிதுவை, திருமாலை, வணங்குவனே.

[திருவிருத்தம் 95— தலைவி அறத்தொடு நிற்கத் துணிதல்]

'எல்லாச் சமயங்களும் எல்லா வகை வழிபாடும் இறைவனின் படைப்புகளே, எல்லாக் கடவுளர்களும் இந்த இறைவனின் உருவங்களே' என்று ஒரு பாசுரத்தில் பேசுகிறார்.

"வணங்கும் துறைகள் பல பல ஆக்கி, மதி விகற்பால்
பிணங்கும் சமயம் பல பல ஆக்கி, அவை அவை தோறு
அணங்கும் பல பல ஆக்கி, நின் மூர்த்தி பரப்பி வைத்தாய்!
இணங்கும் நின்னோரை இல்லாய்! நின்கண் வேட்கை
எழுவிப்பனே.'

[திருவிருத்தம் 96—தலைவி வெறி விலக்குவிக்க நினைத்தல்]

திருவிருத்தம் பாசுரங்களில் ஒரு குறியீடு உள்ளது; குறியீட்டு உருவகமும் எதனை அது குறிப்பதோ அப்பொருளும் சில இடங்களில் கலந்து விடுகின்றன; சாதாரண குறியீட்டு எல்லையைக் கடந்தவாறு சில இடங்கள் உள்ளன; புதிய குறியீடுகள் புகுத்தப்படுகின்றன; சட்டென்று குறியீடுகளை விட்டுவிட்டு நேரடியாக உரை நிகழ்த்தும் இடங்கள் உள்ளன. இவை யாவும் மறைபொருள் கவிதையின் இலக்கணங்கள். இவை யாவற்றுக்கும் திருவிருத்தத்தில் உதாரணங்கள் உள்ளன. ஒருவேளை நம்மாழ்வார், சங்ககாலப் புலவர்கள் காதல் இலக்கியமாகக் கையாண்ட துறைவகையை எடுத்துக்கொண்டு தமது ஆன்மிக ஆர்வத்தை இந்தச் சிமிழ்களில் கொட்ட முயன்றாரோ என்னவோ? நம்மாழ்வார் சங்க இலக்கிய மரபுகளை எவ்வாறு அறிந்திருப்பார் என்பதற்குக் காரணம் கூறமுடியாது. வேத உபநிடதங்களை அவர் அறிந்தது போல இதுவும் ஓர் அற்புதம்தான்.

இந்த முயற்சியில் சில பாசுரங்களில் ஆழ்வாரின் பக்தி ஆர்வத்துக்கு, 'துறை' என்னும் சிமிழ் போதவில்லை. வேறு சில சிமிழ்கள் இந்த பக்தி அனுபவ அழகினைச் செவ்வனே எடுத்துக் காட்டுகின்றன. இதுவே உண்மையான மறைபொருள் இலக்கியத்தின் தன்மையாகும். சாதுரியமிக்க ஒரு கலைஞன் அறிவுபூர்வமாக உருவகத்தை அமைத்துக் கவிதை படைத்து விடுவான். ஆனால் பாரசீக தத்துவக் கவிஞன் ஜலால்—உத்தின் ரூமி வாக்குப்படி, "அறிவுபூர்வமான காரணம் என்பது ஈசனின் வெறும் நிழல். ஈசனே ஒளிவிடும் சூரியன். சாதுரியம் என்பது வெறும் அபிப்பிராயம். திகைப்பு என்பது ஒரு மெய்யுணர்வு."[1]

திருவிருத்தம் என்பது இத்தகைய மெய்யுணர்வின் படைப்பான கவிதையாகும்.

---

[1] ஆல்டஸ் ஹக்ஸ்லியின் 'என்றுமுளதத்துவம்' [பெரினியல் பிலாஸபி] என்ற நூலிலிருந்து.

# 4

# திருவாசிரியம்

'திருவாசிரியம்' என்பது 71 வரிகள் கொண்டதொரு செய்யுள். இதன் ஏழு பகுதிகளில் முதல் பகுதி 15 வரிகளாலும் இரண்டு, மூன்று, நான்கு, ஏழு பகுதிகள் ஒவ்வொன்றும் ஒன்பது வரிகளாலும், ஐந்து, ஆறு பகுதி ஒவ்வொன்றும் பத்துப் பத்து வரிகளாலும் அமைந்தவை.

முதல் 15 வரிகளில் இறைவனின் பெருமை பேசப்படுகிறது. ஆதிசேஷன் என்னும் அரவணைப்பள்ளிகொண்டுள்ள இறைவனின் தோற்றம், சிவந்த பெரிய மேகங்களே ஆடையாக உடுத்திய ஒரு மரகதக் குன்று கடல்மீது கண்வளர்வதுபோல இருக்கிறதாம்.

செக்கர் மா முகில் உடுத்து, மிக்க
செஞ்சுடர் பரிதி சூடி,
அம் சுடர் மதியம் பூண்டு,
பல சுடர் புனைந்த பவளச் செவ்வாய்
திகழ் பசுஞ் சோதி மரகதக் குன்றம்
கடலோன் கைம்மிசைக் கண்வளர்வது போல்,
பீதக ஆடை, முடி, பூண் முதலா
மேதகு பல் கலன் அணிந்து, சோதி
வாயவும் கண்ணவும் சிவப்ப, மீதிட்டுப்
பச்சை மேனி மிகப் பகைப்ப,
நச்சு வினைக் கவர்தலை அரவின் அமளி ஏறி,
எறி கடல் நடுவுள் அறிதுயில் அமர்ந்து,
சிவன், அயன், இந்திரன் இவர் முதல் அனைத்தோர்
தெய்வக் குழாங்கள் கைதொழக் கிடந்த
தாமரை உந்தித் தனிப் பெரு நாயக!
மூவுலகு அளந்த சேவடியோயே!

[திருவாசிரியம் 1–15]

அடுத்த ஒன்பது வரிகள் இறைவனை விளிப்பன; ஞானிகளின் மனம், வேறு எந்த வகையான இன்பத்தையும் நாடாது, இறை—காதல் என்னும் அமுதவெள்ளமான சிறப்பினையே நாடும் எனக் கூறும் வரிகளாகும்;

'உலகு படைத்து உண்ட எந்தை அறை கழல்
சுடர்ப் பூந் தாமரை சூடுதற்கு அவாவு
ஆர்—உயிர் உருகி உக்க நேரிய
காதல் அன்பில் இன்பு ஈன் தேறல்
அமுத வெள்ளத்தான் ஆம் சிறப்பு விட்டு
ஒரு பொருட்டு அசைவோர் அசைக;
திருவொடு மருவிய
இயற்கை மாயாப் பெரு விறல் உலகம்
மூன்றினொடு நல் வீடு பெறினும்
கொள்வது எண்ணுமோ—தெள்ளியோர் குறிப்பே?'

[திருவாசிரியம் 16—24]

மூன்றாவது பகுதி, நாராயணன் பாற்கடலைக் கடைந்த புராண வரலாற்றை விரிவாகக் கூறுகிறது. தனது அடியவர்களுக்கு என்றென்றும் பணியை அருள் சுரக்கும்படி அந்த இறைவனிடத்தில் வேண்டுகிறார் நம்மாழ்வார்.

'குறிப்பில் கொண்டு நெறிப்பட உலகம்
மூன்று உடன் வணங்கு தோன்று புகழ் ஆணை
மெய் பெற நடாய தெய்வம் மூவரில்
முதல்வன் ஆகி, சுடர் விளங்கு அகலத்து
வரை புரை திரை பொர, பெரு வரை வெருவர,
உரும் முரல் ஒலி மலி நளிர் கடல் பட அரவு—
அரசு உடல் தட வரை சுழற்றிய
தனி மாத் தெய்வத்து அடியவர்க்கு இனி நாம்
ஆளாகவே,
இசையுங்கொல்—ஊழிதோறு ஊழி, ஓவாதே?'

[திருவாசிரியம் 25—33]

பாசுரத்தின் நான்காம் பகுதி நம்மாழ்வாரின் பக்தி வேட்கையை வெளிப்படுத்துகிறது. எல்லாம் படைத்தவனை, எல்லாவற்றுக்கும் எல்லா உயிர்களுக்கும் ஆதியானவனைத் தொழ விரும்புகிறார் நம்மாழ்வார்.

'ஊழிதோறு ஊழி, ஓவாது, வாழிய!
என்று, யாம் தொழ, இசையுங்கொல்—யாவகை
உலகமும் யாவரும் இல்லா மேல் வரும்
பெரும் பாழ்க் காலத்து இரும் பொருட்கு எல்லாம்
அரும் பெறல் தனி வித்து ஒரு தான் ஆகி,
தெய்வ நான்முகக் கொழு முளை ஈன்று,
முக்கண் ஈசனொடு தேவு பல நுதலி,
மூவுலகம் விளைத்த உந்தி
மாயக் கடவுள் மா முதல் அடியே?

[திருவாசிரியம் 34–42]

ஐந்தாவது பகுதியில் திருவிக்கிரம அவதாரம் பேசப்படுகிறது. "இரண்டு அடிகளில் மண்ணையும் விண்ணையும் எல்லா உலகங்களையும் அளந்தவன் நெடியோன். இவனுக்கு அல்லாது மற்று எவர்க்கு இந்த உலகம் பணியும்? அவனது ஆயிரம் திருக்கரங்களும் கற்பகமரத் தோப்புப் போல வேண்டிய வரம் அனைத்தும் தருவன அன்றோ?"

மா முதல் அடிப் போது ஒன்று கவிழ்த்து அலர்த்தி,
மண் முழுதும் அகப்படுத்து,
ஒண் சுடர் அடிப் போது ஒன்று விண் செலீஇ,
நான்முகப் புத்தேள் நாடு வியந்து உவப்ப,
வானவர் முறைமுறை வழிபட நெறீஇ,
தாமரைக் காடுமலர்க் கண்ணொடு
கனிவாய் உடையதும் ஆய், இரு ஞாயிறு
ஆயிரம் மலர்ந்தன்ன,
கற்பகக் காவு பற்பல அன்ன,
முடி, தோள் ஆயிரம் தழைத்த
நெடியோய்க்கு அல்லது, அடியதோ உலகே?

[திருவாசிரியம் 43–52]

தன்னைப் படைத்துக் காக்கும் தாய் போன்ற முதல்வனிடம், இந்த உலகம்தான் அறியாமை காரணமாக எத்தனை அலட்சியமாக இருந்து, வெறும் புலன் இன்பங்களில் சிக்குண்டு தவிக்கிறது!" என்று இரங்குகிறார், ஆழ்வார், அடுத்த பகுதியில்.

'ஓஓ! உலகினது இயல்வே!
ஈன்றோள் இருக்க, மணை நீராட்டி,
படைத்து, இடந்து,

உண்டு, உமிழ்ந்து, அளந்து தேர்ந்து, உலகு அளிக்கும்
முதல் பெரும் கடவுள் நிற்ப, புடைப் பல
தான் அறி தெய்வம் பேணுதல் ; தனாது
புல்லறிவாண்மை பொருந்தக் காட்டி,
கொல்வன முதலா அல்லன முயலும்
இனைய செய்கை; இன்பு துன்பு அளி
தொல் மா மாயப் பிறவியுள் நீங்காப்
பல் மா மாயத்து அழுந்துமாம், நளிர்ந்தே.

[திருவாசிரியம் 53–62]

"இது என்ன உலகம்? எல்லாம் அறிந்த முதல் பெருங் கடவுள், அருள் சுரப்பதற்காகக் காத்து நிற்க, அவனை விடுத்து இந்த மண்ணுலகத்தில் வீணாக அறியாமையில் அலைகின்றனரே" என்ற ஏக்கம் இந்த வாக்கில் தொனிக்கிறது.

கடைசிப் பகுதியில் பிரளயம் என்றும் ஊழி முடிவு பற்றிக் கூறுகிறார், ஆழ்வார். அப்போது அனைத்து உலகங்களும், கடவுளர் அனைவரும், மற்ற எல்லாமும் இந்த ஒரு மா தெய்வத்திடம் ஈர்க்கப்படும். வேறு என்ன மிஞ்சும்?

'நளிர் மறிச் சடையனும், நான்முகக் கடவுளும்,
தளிர் ஒளி இமையவர் தலைவனும், முதலா
யாவகை உலகமும், யாவரும், அகப்பட;
நிலம், நீர், தீ, கால், சுடர், இரு விசும்பும்
மலர் சுடர் பிறவும், சிறிது உடன் மயங்க;
ஒரு பொருள் புறப்பாடு இன்றி, முழுவதும்
அகப்படக் கரந்து, ஓர் ஆல் இலைச் சேர்ந்த எம்
பெரு மா மாயனை அல்லது,
ஒரு மா தெய்வம் மறிய உடையமோ யாமே?'

[திருவாசிரியம் 64–71]

இந்தப் பாடல் அளவில் சிறியதே. ஆனால் கற்பனைச் செல்வம் நிறைந்தது. நம்மாழ்வாரின் கற்பனை, புராண நிகழ்ச்சிகளினூடே சுடர்விடுவதைக் காட்டுகிறது. அற்புதப் பெரும் தத்துவமான இறைவனிடம் அவருக்குள்ள ஆழ்ந்த அளவற்ற பக்தியையும் வெளிப்படுத்துகிறது.

# 5

# பெரிய திருவந்தாதி

பெரிய திருவந்தாதி என்பது எண்பத்தேழு வெண்பாக்கள் கொண்ட கவிதையாகும்.

ஒரு வெண்பாவுக்கும் அடுத்த வெணபாவுக்கும் தொடர்பு இருந்தாகவேண்டும் என்று பொருள்காண முற்படுவது கடினமான முயற்சி, பயனற்றது எனலாம். எனினும் வியாக்கியான வல்லுநர்கள் இதனை விரும்பி முயன்றுள்ளார்கள். ஒவ்வொரு பாடலும் ஒரு தனிப் பாடலே. ஒரு மணிப்பாடல்! நம்மாழ்வாரின் ஒரு மனநிலையின் வெளிப்பாடேயாகும். எல்லாப் பாடல்களுக்கும் உள்ள தொடர்பு ஒன்றே. அவற்றின் சரடு இறைப்பற்றே, கடவுள் மீது கொண்ட காதல் பயணத்தில் நேரும் சோதனைகளும் தோல்விகளும் வெற்றிகளுமே கவிதைப் பொருள்.

இந்தக் கவிமாலையில் பல பாடல்களில் நம்மாழ்வார் தமது நெஞ்சத்துக்கே உரையாற்றுகிறார். அவற்றில்தான் எத்தனை வகை பாவங்கள்! பிடிவாதமான நிராகரிப்பும் சந்தேகமான நம்பிக்கைகளும் தொனிக்கும் பாடல்கள் சிலவற்றை இங்கே காணலாம். முதல் பாடலில் ஆழ்வார் தமது நெஞ்சத்தை விளித்து இறைவனைத் தொழுவதற்கு அழைக்கிறார்;

> முயற்றி சுமந்து எழுந்து
> முந்துற்ற நெஞ்சே!
> இயற்றுவாய் எம்மொடு நீ கூடி
> நயப்புடைய நா ஈன் தொடைக் கிளவியுள்
> பொதிவோம் நற்பூவைப் பூ ஈன்ற வண்ணன் புகழ்.

[பெரிய திருவந்தாதி—1]

"காயம்பூ வண்ணனை நாம் இருவருமாகப் பாடுவோம்" என்று தொடங்கும் ஆழ்வார், கடவுளை அடையும் முயற்சியில் தமக்கு இத்தனை ஆவலா என்று வியக்கிறார்.

இருநால்வார், ஈர் ஐந்தின்மேல் ஒருவர்
எட்டோடு ஒரு நால்வார், ஓர் இருவர் அல்லால்
திருமாற்கு யாம் ஆர்! வணக்கம் ஆர்!
ஏ பாவம் நன்நெஞ்சே!
நாம் ஆ மிக உடையோம் நாழ்!

[பெரியதிருவந்தாதி—10]

"எப்போதும் இறைவனைத் தொழும் முப்பத்து மூன்று தேவர்கள் — எட்டு வசுக்கள், பதினொரு ருத்ரர்கள், பன்னிரண்டு ஆதித்யர்கள், அச்வினிதேவர் என இருவர் — இருக்கிறார்களே, இவர்களுக்கு முன்பு நாம் யார்? நம் நிலை என்ன? எவ்வளவு கடினமானது, நினைத்துப்பார்!" என்னும்போது நிராசை தொனிக்கிறது. வழி தவறும் நெஞ்சைக் குறித்து ஆழ்வார் வருந்துகிறார்.

நீ யன்றே ஆழ் துயரில் வீழ்விப்பான் நின்று உழன்றாய்?
போய் ஒன்று சொல்லி என்? போ நெஞ்சே — நீ என்றும்
காழ்த்து உபதேசம் தரிலும் கைக்கொள்ளாய், கண்ணன்தாள்
வாழ்த்துவதே கண்டாய் வழக்கு.

[பெரியதிருவாந்தாதி—12]

துயரிலும் துன்பத்திலும் மேலும் மேலும் என்னை ஆழச்செய்கிறாயே நெஞ்சே. உனக்கு உபதேசம் செய்து என்ன பயன்? எனது பேச்சைக் கேட்க மாட்டாயே, அவனது திருவடிகளைத் தொழுவோம் வா — என்கிறார்.

ஆழ்வார் நெஞ்சத்துடன் சொல்கிறார்; புகழ் வாசகங்கள் எவ்வளவு சாதாரணமாக இருந்தாலும் அவனது பெருமை ஒன்றும் குறைந்துவிடாது.

பார்த்து ஓர் எதிரிகா! நெஞ்சே! படுதுயரம்
பேர்த்து ஓதப் பீடு அழிவாம் பேச்சில்லை—ஆர்த்து ஓதம்
தம்மேனித்தாள் தடவத் தாம் கிடந்து தம்முடைய
செம்மேனிக் கண் வளர்வார் சீர்.

[பெரியதிருவந்தாதி—15]

பரிகாசப் பேச்சாலும் ஆழ்வார் நெஞ்சிடம் முறையிடுகிறார், இறைவனைப் பாடும்படி.

அமைக்கும் பொழுது உண்டே? ஆராயில் நெஞ்சே
இமைக்கும் பொழுதும்? இடைச்சி — குமைத் திறங்கள்
ஏசியே ஆயினும் ஈசன் துழாய் மாயனையே
பேசியே போக்காய் பிழை.

[பெரியதிருவந்தாதி–38]

அவனைப் புகழத்தான் வேண்டுமா என்ன? யசோதையைப் போல அவனை ஏளனமாகப் பேசினாலும் போதும்; இமைக்கும் பொழுதும் அவன் நினைவு நீங்காதிருக்க வேண்டும், என் நெஞ்சமே.

திருவருள் கிட்டவில்லையே என்று ஆழ்வார் நொந்துகொள்கிறார்:

என்றும் ஒருநாள் ஒழியாமை யான் இரந்தால்
ஒன்றும் இரங்கார்; உருக் காட்டார் — குன்று
குடையாக ஆ காத்த கோவலனார், நெஞ்சே
புடைதான் பெரிதே புவி.

[பெரியதிருவந்தாதி – 74]

வாய்பேசாத பசுக்கூட்டத்திற்கு அருளினானே, கோவர்த்தன மலைபிடித்து. தினமும் இரந்து பாடும் தன் பொருட்டு அவன் அருள் காட்டவில்லையே? அவள் அருளைப் பொருத்தவரை உலகமானது ஒரு பக்கமாகவே புடைத்துக் கொண்டுவிட்டதா என்ன?

இந்த உலகம் இனியதுதான். ஆனால் ஆண்டவனின் உலகம் இன்னும் இனியது என்கிறார் ஆழ்வார்.

துணை, நாள், பெருங்கிளையும் தொல்குலமும்
சுற்றத்து இணை நாளும் இன்புடைத்தா
மேலும் கணை நாணில்
ஓவாத் தொழில் சார்ங்கன் தொல் சீரை
நன்நெஞ்சே! ஓவாத ஊண் ஆக உண்.

[பெரிய திருவந்தாதி–78]

நண்பர் கூட்டம், நீண்டவாழ்நாள், சந்ததி, குலப்பெருமை, சுற்றத்தார் வழங்கும் மகிழ்ச்சி என்று பல இன்பங்களை தினமும் துய்த்தாலும் இவற்றிலும் அதிக இன்பம் அளிப்பது சார்ங்கம் என்னும் தனது வில்லிலே இடையறாது கணை எறியும் நாண் ஓசையைப் பற்றி நினைத்து அவனது பெருமைகளை எண்ணி எண்ணி அவையே ஆராத அமுதாகப் பருகும் நிலையாகும்.

எப்போதும் தமது நெஞ்சு இறைநினைவிலேயே இருக்கவேண்டும் என்னும் வேண்டுகோளுடன் நிறைவு பெறுகிறது, இந்தப் பாடல் தொகுப்பு. தொடக்கத்திலே அலைந்து திரிந்த தமது நெஞ்சத்தை நேரானதும் குறுகியதுமான இறை நெறிக்குத் திருப்ப முயன்று வெற்றிகண்டுவிட்டாராம்.

யானும் என் நெஞ்சும் இசைந்து ஒழிந்தோம்.
வல்வினையைக்
கானும் மலையும் புகக் கடிவான்
தான் ஓர் இருள் அன்ன மாமேனி
எம் இறையார் தந்த அருள் என்றும்
தண்டால் அடித்து.

[பெரியதிருவந்தாதி—26]

கருமைநிற வண்ணன், இருளே திருவுரு என்னும்படியானவன். அவனது அருள் என்ற தண்டினாலே வல்வினை என்றும் இடரை அடித்துப் போட்டாயிற்று. இனி நானும் எனது நெஞ்சமும் நிறைநெறியிலேயே இசைந்து கிடப்போம், அது காடானாலும் மேடானாலும்.

இந்த அந்தாதியில் ஆண்டவனையே நேரில் விளிக்கும் பாடல் விண்ணப்பங்களும் உள்ளன.

நெறிகாட்டி நீக்குதியோ?
நின்பால் கருமா முறிமேனி காட்டுதியோ?
மேல்நாள்—அறியோமை
என் செய்வான் எண்ணினாய் கண்ணனே?
ஈது உரையாய்
என் செய்தால் என் படோம் யாம்.

[பெரிய திருவந்தாதி 6]

"என் தலைவா, சொல். எங்களை என்ன செய்வதாக இருக்கிறாய்? 'போய்விடு' என விரட்டி விடுவாயா! அல்லது கரியமாந்தளிர் போன்ற உனது திருமேனியின் தரிசனம் அளித்து எங்களை உய்விப்பாயோ? நாங்கள் அறியோம். நீ என்ன செய்தால் என்ன? நாங்கள் என்னதான அனுபவிக்கமாட்டோம்?" நல்ல நெறியிலேயே மனத்தைச் செலுத்துவது அவ்வளவு சுலபமா என்ன?

இவை யன்றே நல்ல, இவை யன்றே தீய.
இவை என்று இவை அறிவன் ஏலும் — இவை எல்லாம்
என்னால் அடைப்பு நீக்கு ஒண்ணாது இறையவனே.
என்னால் செயற்பாலது என்?

[பெரிய திருவந்தாதி—3]

'இது சரி, இது தப்பு என்று எனக்குத் தெரிகிறது. ஆனால் ஒன்றை விடுவதோ, ஒன்றைப் பற்றுவதோ என் வசம் இல்லையே, என்ன செய்வது?'

தனக்கு எட்டாத பொருள் இறைவன் என்று தெரிந்தும் ஆழ்வாரின் பக்தி அவனை அடையவே முயல்கிறது.

அருகும் சுவடும் தெரிவுணரோம், அன்பே
பெருகும் மிக இது என்? பேசீர்! பருகலாம்
பண்பு உடையீர்! யார் அளந்தீர்! பாவியேம்
கண் காண்பரிய நுண்புஉடையீர்! நும்மை நுமக்கு.

[பெரியதிருவந்தாதி 8]

'என்ன இது? உனது பண்பை எண்ணினாலே அமுதபானம் அருந்தியது போலாகும். நுட்பமான உனது சொருபத்தை பாவிகளாகிய நாங்கள் காண்பது எப்படி? உன்னை நெருங்குவது எப்படி? வழி தெரியோம். ஆனால் அன்பு இப்படிப் பெருகி வழிகிறதே. எப்படி? ஏன்?'

ஆழ்வார் வேண்டும் வரம் ஒன்றேதான். அவனை மறவாதிருக்கும் வரமே அது.

மாலே படிச்சோதி மாற்றேல் இனி உனது
பாலே போல் சீரில் பழுத்து ஒழிந்தேன் — மேலால்
பிறப்பின்மை பெற்று அடிக்கீழ்க் குற்றேவல் அன்று;
மறப்பின்மை யான் வேண்டும் மாடு.

[பெரியதிருவந்தாதி — 58]

" செல்வம் [மாடு] என்று எனக்கு வேண்டுவது ஒன்றே. இனிப் பிறப்பு இல்லாமல் உனது திருவடியிலே கைங்கரியம் செய்து நிற்கவேண்டும் என்றெல்லாம் நான் வேண்டிக் கொள்ளவில்லை. உனது திருமேனி [படி]யின் நினைவு மாறாமல் இருக்கட்டும். உனது சீரெல்லாம் பாலாக என்னைப் பக்குவப்படுத்திவிட இப்படி உன்னை மறக்காமல் இருக்கவேண்டும் என்பதே நான் வேண்டும் வரம்! "

இந்த அந்தாதியில் பல இடங்களில் நம்மாழ்வார் தமது வேட்கையின் வேதனைகளை வெளியிடுகிறார் என்றாலும் உள்ள நிறைவு பெற்ற மகிழ்ச்சியின் வெளிப்பாடுகள் பல பாடல்களில் தொனிக்கின்றன.

பூவையும் காயாயும் நீலமும் பூக்கின்ற
காவிமலர் என்றும் காண்தோறும் — பாவியேன்
மெல்லாவி மெய்மிகவே பூரிக்கும், அவ்வவை
எல்லாம் பிரான் உருவே என்று

[பெரிய திருவந்தாதி—73]

"பூவை, காயா, நீலம், காவிமலர் என்று எதைக் காணும்போதும், ஐயோ, என் உடலும் உயிரும் பூரிக்கிறதே, இதெல்லாம் எம்பிரானது உருவங்களே என்ற உணர்வு எழுகிறது!"

நம்மாழ்வார் மேலும் சொல்கிறார்! "இதுபோதும். அவன் அருள் என்று வைகுந்தம் கிட்டுவதைவிட அவன் மீது அன்பு பூண்டிருப்பதே எனக்குப் பேரின்பம்."

ஒன்று உண்டுசெங்கண்மால்! யான் உரைப்பது, உன் அடியார்க்கு
என் செய்வன் என்றே இருத்தி நீ — நின்புகழில்
வைகும் தம் சிந்தையிலும் மற்று இனிதோ நீ அவர்க்கு
வைகுந்தம் என்று அருளும் வான்?

[பெரிய திருவந்தாதி 53]

என்னில் மிகு புகழார் யாவரே? பின்னையும் மற்று
எண்ணில் மிகு புகழேன் யான் அல்லல் — என்ன
கருஞ் சோதிக் கண்ணன் கடல்புரையும் சீலப்
பெருஞ்சோதிக்கு என் நெஞ்சு ஆள் பெற்று.

[பெரிய திருவந்தாதி—4]

என்னை இறைவனின் அடியவனாக ஒப்படைத்துவிட்டேன். இதற்குமேல் புகழ் வேறு ஒன்று உண்டோ? இந்த ஆராத காதல் நெஞ்சத்துக்கு ஏற்ற அருள் கிட்டுகிறது. என் நெஞ்சுக்குள்ளே அவன் புகுந்துவிட்டான். இனி ஒன்றும் வேண்டாம் என்கிறார். ஆழ்வார் இப்பாசுரத்தில்

வரவு ஆறு ஒன்று இல்லையால்! வாழ்வு இனிதால்! எல்லே!
ஒருவாறு ஒருவன் புகாவாறு — உருமாறும்
ஆயவர்தாம் சேயவர்தாம் அன்று உலகம் தாயவர்தாம்
மாயவர்தாம் காட்டும் வழி. [பெரியதிருவந்தாதி—56]

"மாயவன் எனக்கு ஆச்சரியமான வழி காட்டிவிட்டான்! இனி வாழ்க்கை இனிக்கிறது எல்லே!" என்று பரவசப்படுகிறார். 'கடவுளா, தாமா எவர் பெரியவர்' என்றும் வேடிக்கையாகக் கேட்கிறார் :

புவியும் இருவிசும்பும் நின்னகத்த; நீ என்
செவியின் வழி புகுந்து என் உள்ளாய் — அவிவு இன்றி
யான்பெரியன் நீபெரியை என்பதனை யார் அறிவார்
ஊன் பருகு நேமியாய் உள்ளு

[பெரிய திருவந்தாதி–75]

'உலகம் எல்லாம் உன்னுள் அடக்கம். நீயோ என் செவி வழி வந்து என் உள்ளே அடங்கிவிட்டாய். நீயா, நானா, யார் பெரியவர், யார் அறிவார், சொல்' என்கிறார்.

வகை வகையான ரசனைக்கும் உள்ளம் கனியும் கருத்துகளுக்கும் இந்தப் 'பெரிய திருவந்தாதி' ஆழ்வாரின் பேரிலக்கியமான 'திருவாய்மொழிக்கு' ஒரு முன்னோடி, ஒரு முன்னோட்டம்.

# 6

# திருவாய்மொழி

'திருவாய்மொழி', நம்மாழ்வாரின் முக்கியமான அருளிச்செயல், அளவில் நீண்டது. மரபு வரலாற்றுப்படி, வீரநாராயணபுரத்து நாதமுனிகள் என்னும் வைணவ ஆசாரியர் மட்டும் முயன்று தேடியிராவிட்டால் உலகுக்கு இந்தத் திருவாய்மொழியும் ஆழ்வாரின் பிற அருளிச் செயல்களும் கிடைத்திராது. அவர் இருந்த ஊருக்கு, தென்தேசத்திலிருந்து இரண்டு பேர் வந்து திருவாய்மொழியின் ஆயிரத்துள் ஓர் பத்துப்பாடலைப் [திருவாய்மொழி – 5–8] பாடிக் காட்டவும், அதிலே மனம் ஈடுபட்டுப்போய், முழு ஆயிரத்தையும் அறியத் துடித்தாராம். அவர் உடனே குருகூர் என்னும் ஆழ்வார் திருநகரிக்குச் சென்றார். இது இன்றைய திருநெல்வேலி மாவட்டத்திலுள்ளது. அங்கே அவருக்குக் கிடைத்ததெல்லாம் நம்மாழ்வாரைப் போற்றி மதுரகவி ஆழ்வார் இயற்றிய 'கண்ணிநுண் சிறுதாம்பு' என்னும் பத்துப்பாடல்களே. பராங்குசதாசர் என்பவரிடமிருந்து நாதமுனிகள் இதனைப் பெற்றார். இந்தப் பாடல்களைப் பாடிப்பாடி மீண்டும் பாடிப்பாடியபடியே இருந்தார். இவ்வாறு பாடப்பாட நம்மாழ்வாரின் பாசுரங்கள் அத்தனையும் அவருக்கு வெளிப்பட்டனவாம். அவற்றையெல்லாம் இசையில் அமைத்து வைணவத் திருக்கோயில்களிலே பாடும் வகை வகுத்தார் நாதமுனிகள். இந்தப் பழக்கம் இன்றும் தொடர்கிறது. ஆனல் பாசுரங்கள் இசையுடன் பாடப்படாமல் அப்படியே ஓதப்படுகின்றன.

நாதமுனிகள் காலத்திலேயே திருவாய்மொழிக்கு நம்மாழ்வார் அருளிச் செயல்களில முதல் இடம், அதுமட்டுமல்ல, எல்லா ஆழ்வார்களின் பாசுரங்களின் வரிசைப்படியும் தலையாய இடம் வழங்கப்பட்டுள்ளது. இதிலே உபநிடதங்கள் அவற்றின் ஆயிரம் கிளைகளுடன் இருப்பதால் இதுவே 'தமிழ் வேதக்கடல்' என்றார் நாதமுனிகள். வேதத்திற்கும் கீதைக்கும் பேருரை அருளிய ஸ்ரீராமானுஜர், நம்மாழ்வாரின் திருவாய்மொழியால் பயனடைந்து

உகந்துள்ளார். 13-ம் நூற்றாண்டைச் சேர்ந்த வைணவப்பெரியவர் ஸ்ரீபிள்ளைலோகாசார்யர் தமது ஸ்ரீவசன பூஷணம் என்ற நூலில் நம்மாழ்வாரைப் பற்றி பக்தியுடன் குறிப்பிடுகிறார். 13-ம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் 14-ம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் வாழ்ந்த வைணவ ஆசாரியர் ஸ்ரீவேதாந்த தேசிகர் 'திருவாய்மொழி' யைத் தமிழ் உபநிடதம் என்று பாராட்டி அதன்மீது சமஸ்கிருதத்தில் 'திரமிடோபநிஷத் சாரம்', மற்றும் 'திரமிடோபநிஷத் தாத்பர்யரத்னாவளி' என்று இரண்டு நூல், இயற்றியுள்ளார். தாத்பர்யரத்னாவளியின் நான்காம் சுலோகத்தில் கூறுகிறார்: திருவாய்மொழி தமிழில் இருப்பதால் அதன் மதிப்பு அதிகம். வேதத்தைப் போலன்றி இது அனைவருக்கும் எட்டக்கூடியதாக இருக்கிறது.' இதே கருத்தை ஸ்ரீபிள்ளைலோகாசார்யரின் இளைய சகோதரரான ஸ்ரீஅழகிய மணவாளப்பெருமாள் நாயனார் தமது 'ஆசார்ய இருதயம்' என்ற நூலில் [1-73] "இது மண்பானை அன்று, பொன்வட்டில்" என்று குறிப்பிட்டிருக்கிறார். அதாவது அந்த நாளில் மண்பானை ஒரு குறிப்பிட்ட நிகழ்ச்சியில் ஒரு முறை மட்டும் பயன்படுவதனால் வேறு ஒரு காரியத்துக்கு அதனை உபயோகிப்பதில்லை. அது ஆகாது. அப்படி மறுபடி வேறு செயலுக்கு அதே பாண்டத்தைப் பயன்படுத்துவது வழக்கமில்லை. ஆனால் திருவாய்மொழியையோ சாதிபேதமின்றி யாரும் பயன்படுத்தலாம். எப்போதும் ஒளிவீசியபடி இருக்கும் பொன்பாத்திரம். அது ஸ்ரீமணவாள மாமுனி என்னும் பெரு வைணவ ஆசார்யர் தமக்குத் திருவாய்மொழியில் இருந்த பெரும் ஈடுபாடு காரணமாக அதன் ஒவ்வொரு பத்துக்கும் ஒரு கருத்துரையினை வெண்பாவாக நூறு வெண்பாக்கள் கொண்ட அந்தாதியாக இயற்றியுள்ளார். வைணவ சமயப்பெரியோர்கள் தமது அறிவாற்றலை யெல்லாம் காட்டி திருவாய்மொழிக்குப் பல பேருரைகள் வியாக்கியானங்களாக இயற்றியுள்ளார்கள். இவற்றுள் ஒன்று ஸ்ரீராமானுஜர் காலத்தில் அவரது ஆணைக்கு ஏற்பத் திருக்குருகைப்பிரான் பிள்ளான் என்பவர் இயற்றியதாகும். மற்ற உரைகளில் விரிவானது பதிமூன்றும் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்த நம்பிள்ளை இயற்றிய 'முப்பத்தாறாயிரப்படி' என்னும் 'ஈடு' ஆகும். இந்த உரைக்கு 'பகவத் விஷயம்' என்று பெயர். திருவாய்மொழி என்பது பகவானை மட்டுமே பொருளாகக் கொண்டதன்றோ. தெற்கே வைணவர்கள் திருவாய்மொழி என்னும் நூலுக்குக் கொடுத்த ஏற்றம் இவற்றால் புலப்படுகிறது.

நூலினைப் பார்ப்போம். இது 1102 நாலு வரிப் பாடல்கள் கொண்டது. எல்லாம் பலவகையான விருத்தப்பாக்களால் ஆனவை; பதினொரு பாடல்கள் கொண்ட பகுதிகள் கொண்டது: ஒரு பகுதியில் மட்டும் பதிமூன்று பாடல்கள் [திருவாய்மொழி 2.7] உள்ளன. இவ்வாறு பதினொரு பாசுரங்கள் கொண்ட பகுதி ஒரு திருவாய்மொழி. இப்படிப் பத்துக் கொண்டது ஒரு 'பத்து' ஆகும். இப்படி திருவாய்மொழி நூலில் பத்துப் 'பத்துக்கள்' அதாவது ஒருநூறு திருவாய்மொழிகள் அல்லது 1102 பாசுரங்கள் உள்ளன.

இந்நூலில் திருவாய்மொழிப்பாசுரங்கள் 'மெய்ப்பொருளை நோக்கி யாத்திரை', 'நம்மாழ்வாரின் கவிதை', 'நம்மாழ்வாரின் தத்துவம்' என்ற பகுதிகளில் எடுத்தாளப்படுகின்றன. இங்கும் சிலவற்றைப் பார்க்கலாம்.

திருவாய்மொழியில் ஒரு நூறு பலச்சுருதிப் பாடல்கள் உள்ளன. இவை ஒவ்வொரு திருவாய்மொழியிலும் காணும் இறுதிப் பாசுரம். இவற்றிலே ஆழ்வார் தாம் இந்த நூலாசிரியர் என்று தெரிவிப்பதோடு இந்தப் பாசுரங்களைப் பயிலுவோருக்கு நேரும் நற் பயன்களையும் தெரிவிக்கிறார். அந்நாளில் இவ்வாறு நூலாசிரியர் இறுதியில் தமது கையொப்பம் இடுவது போலத் தம்மைப் புலப்படுத்தி நூல் இயற்றுவது பழக்கமாதலின் நம்மாழ்வாரும் இந்த வழக்கத்தைப் பற்றியிருக்கலாம். தமது திருவாய்மொழியிலும் திருவந்தாதியிலும் இந்த வழக்கத்தைப் பின்பற்றியுள்ள நம்மாழ்வார் 'திருவாசிரியம்' 'பெரியதிருவந்தாதி' என்னும் இரண்டிலும் இவ்வாறு தம்மைப் புலப்படுத்திக் கொள்ளவில்லை.

இந்தப் பலசுருதிப் பாடல்கள் எல்லாம் மூல நூலின் இயல்புடனும் கருத்துடனும் ஒத்துப் போகின்றனவா என்று கேட்கலாம். சில இவ்வாறு இயல்பாக உள்ளன. உதாரணமாக ஆழ்வார் தம்மைத் திருமாலுக்கு உரிய தொண்டர் தொண்டர் சடகோபன்' [6.9.11]; 'புனல்பள்ளி அப்பனுக்கே தொண்டர் தொண்டர் தொண்டர் தொண்டர் சடகோபன் [7.1.11] நிறைமூவுலகுக்கும் நாயகன் தன் அடிமை நேர்பட்ட தொண்டர் தொண்டர் தொண்டர் தொண்டன் சடகோபன்' [8—9—11] என்றெல்லாம் சொல்லிக் கொள்ளும் இடங்கள். வேறு சிலவற்றில் இவ்வாறு இல்லை. இதற்கு விளக்கம் என்று தருவதானால், ஒவ்வொரு திருவாய்மொழியும், அதில் ஒவ்வொரு பாசுரமும் இயற்றப்பட்டபோது ஆழ்வாரின் மன அனுபவநிலை எப்படி இருந்ததோ அதைத்தான் காட்டியுள்ளார் எனலாம். இந்தத் திருவாய்மொழி முழுதுமே ஒரே மூச்சில் பாடப்பட்டதோ என்னவோ

நாம் அறியோம். கருத்துக்களின் வீச்சுத்தான் எத்தனை தூரம்! 'ஆன்மாவின் இருள்' குறித்துப் புலம்புவதிலிருந்து எல்லாம் உணர்ந்து தெளிந்து இரண்டறக் கலந்த ஆனந்தக் களிப்புவரை எத்தனை வீச்சு! இவை யாவும் ஒன்றுக்கொன்று பொருத்தமின்றி இருப்பதுபோல் அடுத்தடுத்துக் காண்பதும் பாமர மனத்தின் தர்க்கத்தை மீறியதாகும்.

ஒரு சில திருவாய்மொழிகள் நீதி உணர்த்துவன, நெறிகள் காட்டுவன. அவற்றின் நோக்கம் மக்களை ஆழ்ந்த உலகப்பற்றிலிருந்து ஈர்த்து நித்தியமான பேரருள் நெறியை உணர்த்துவதேயாகும். இந்தப் பாசுரங்கள் மரபுள்ள பழம் மதிப்புக்களை வற்புறுத்துகின்றன. உலக வாழ்வின் நித்தியமின்மை, உணர்வுகள் மீது புலன்களின் ஆதிக்கம், ஆன்ம சுகம் அளிக்க இயலாத உலகச் செல்வங்களின் குறை, என்றும் இளமையாய் இனிமையாய், அழகாய், நல்லதாய் விளங்கும் இறை அருளை நோக்க வேண்டிய அவசியம் ஆகியவற்றை உணர்த்தும் பாசுரங்கள். இப்படி ஒரு சில:

'மின்னின் நிலை இல
மன்னுயிர் ஆக்கைகள்

[திருவாய்மொழி 1–2]

'வீடுமின் முற்றவும்
வீடு செய்து உம்உயிர்
வீடுடையானிடை
வீடு செய்ம்மினே'

[திருவாய்மொழி 1–2–1]

'நீர் நுமது என்று இவை —
வேர்முதல் மாய்த்து இறை
சேர்மின் உயிர்க்கு அதன்
நேர் இறையில்லே

[திருவாய்மொழி 1–2–3]

'வார்த்தை அறிபவர் மாயவற்கு
ஆளன்றி ஆவரோ?
போர்த்த பிறப்போடு நோயொடு
மூப்பொடு இறப்பு இவை
பேர்த்துப் பெருந்துன்பம் வேரற
நீக்கித் தன் தாளின் கீழ்ச்
சேர்த்து அவன் செய்யும் சேமத்தை
எண்ணித் தெளிவுற்றே.

[திருவாய்மொழி 7–5–10]

'சாமாறும் கெடுமாறும்
தமர் உற்றார் தலைத்தலைப் பெய்து
ஏமாறிக் கிடந்து அலற்றும்
இவை என்ன உலகு இயற்கை?

[திருவாய்மொழி 4–9–2]

சாகின்ற விதமும் செல்வம் கெடுகின்ற விதமும் தாயாதிகளும் மற்றைய உறவினர்களும் மேல் விழுந்து மேல் விழுந்து துக்கத்தினால் கிடந்து அழுகின்ற வகையுமான உலக இயற்கை இவை என்ன? இவர்கள் உட்புறம் வகை ஒன்றனையும் அறிகின்றிலேன் யான். அரவணையாய் அம்மானே அடியேன் விஷயத்தில் திருவுள்ளம் பற்றி அடியேனை உன்னிடத்தில் அழைத்துக் கொள்ளும் வகையில் விரைய வேண்டும்.

இவ்வாறான அனுபவ அறிவு ஆழ்வாரை ஆண்டவனை நோக்கிக் கூவச்செய்கிறது, வாழ்க்கையிலிருந்து விடுதலை வேண்டி.

ஆமாறு ஒன்று அறியேன் நான்,
அரவணையாய் அம்மானே
கூமாறே விரை கண்டாய்
அடியேனைக் குறிக் கொண்டே

[திருவாய்மொழி 4–9–2]

புலன்களால் பெறும் இன்பம் அளவுள்ளது. சிறியது. 'அவற்றை விட்டுவிட்டேன்' என்கிறார் ஆழ்வார். 'அளவற்ற அழகுள்ள ஆண்டவனைக் காணும் பெரும் இன்பத்திற்காக இவற்றை விட்டுவிட்டேன்.'

கண்டு கேட்டு உற்று மோந்து
உண்டு உழலும் ஐங் கருவி
கண்ட இன்பம் தெரிவு அரிய
அளவில்லாச் சிற்றின்பம்
ஒண் தொடியாள் திருமகளும்
நீயுமே நிலா நிற்ப,
கண்டசதிர் கண்டொழிந்தேன்,
அடைந்தேன் உன் திருவடியே.

[திருவாய்மொழி 4–9–10]

சில பாசுரங்களில், மற்றவர்களுக்கு உபதேசமாகத் தொடங்கி ஆழ்வார் தமக்குள்ள நிலைக்கு இரங்கித் தாமே தம் அனுபவத்தைத்

தனிப் பாடல் போலப் பாடுவதாக அமைந்திருப்பதைக் காண்கிறோம்.

திருவாய்மொழி இவ்வாறு பல தனிப் பாடல்களின் திரட்டாகத் தோன்றலாம். ஒவ்வொரு பாசுரமும் ஆழ்வாருக்கு ஆண்டவனிடம் இருக்கும் ஆழ்ந்த அன்பைப் புலப்படுத்தும் ஓர் அம்சத்தையோ ஓர் அசைவையோ வெளிப்படுத்துகிறது. இந்த அன்பு ஆர்வத்தின் வெவ்வேறு அலைகளை 'மெய்ப் பொருளை நோக்கி' என்ற அத்தியாயத்தில் காண்கிறோம். அந்த உணர்ச்சி நேர்முகமாகவும் குறியீடாகவும் இரு வகைகளில் வெளிப்படுகிறது. நேர்முகமாக ஆழ்வாரின் உணர்ச்சியை வெளிப்படுத்தும் பாசுரப் பகுதிகள்:

வேதியா நிற்கும் ஐவரால் வினையேனை
மோதுவித்து, உன் திருவடிச்
சாதியா வகை நீ தடுத்து என் பெறுதி அந்தோ?

[7–1–3]

முடியாதது என் எனக்கேல்இனி முழு ஏழ்
உலகும் உண்டான் உகந்து வந்து
அடியேன் உள் புகுந்தான் அகல்வானும
அல்லன் இனி.

[2–6–7]

ஈசன் வானவர்க்கு என்பன் என்றால் அது
தேசமோ திருவேங்கடத்தானுக்கு?
நீசனேன் நிறை ஒன்றுமிலேன், என் கண்
பாசம் வைத்த பரஞ்சுடர்ச் சோதிக்கே

[3–3–4]

ஈடும் எடுப்பும் இல் ஈசன்
மாடுவிடாது என் மனனே
பாடும் என் நா அவன் பாடல்
ஆடும் என் அங்கம் அணங்கே

[1–6–3]

எனது ஆவியுள் கலந்த
பெரு நல் உதவிக் கைம்மாறு
எனது ஆவி தந்து ஒழிந்தேன்
இனி மீள்வது என்பது உண்டோ?
எனது ஆவியாவியும் நீ

பொழில் ஏழும் உண்ட எந்தாய்,
எனது ஆவியார்? யான் ஆர்?
தந்த நீ கொண்டாக்கினையே

[2–3–4]

துயக்கறு மதியில் நல் ஞானத்துள்
அமரரைத் துயக்கும்
மயக்குடை மாயைகள் வானிலும்
பெரியன வல்லன்,
புயல் கருநிறத்தனன் பெரு நிலம்
கடந்த நல்லடிப் போது
அயர்ப்பிலன் அலற்றுவன்
தழுவுவன் வணங்குவன் அமர்ந்தே

[1– 3–10]

பூசும் சாந்து என் நெஞ்சமே
புனையும் கண்ணி எனதுடையு
வாசகம் செய் மாலையே
வான் பட்டாடையும் அஃதே
தேசமான அணிகலனும்
என் கை கூப்புச் செய்கையே

[4–3–2]

பூத்தன் மாலை கொண்டு உன்னைப்
போதால் வணங்கேனேலும், நின்
பூத்தன் மாலை நெடு முடிக்குப்
புனையும் கண்ணி எனது உயிரே

[4– 3–4]

இவ்வாறெல்லாம் நேர்முகமாக, தன்மை ஒருமையில் பேசுவது தவிர ஆழ்வார் குறியீடுகள் வாயிலாகவும் பல திருவாய்மொழிப் பாசுரங்களில் தமது கருத்துக்களை வெளியிடுகின்றார். இக் குறியீடுகளுக்கு நம்மாழ்வாரின் தத்துவார்த்தங்களையும் அவற்றைக் கவிஞர் எங்ஙனம் அமைத்துள்ளார் என்றும் இந்த நூலிலே பிறிதோரிடத்தில் காணலாம். 'திருவாய்மொழி'யில் காணும் ஒருவகைக் குறியீட்டைப் பற்றி மட்டும் இங்கே கவனிக்கலாம். முக்கியமான குறியீடு, கடவுளே காதல் நாயகன்; தனி உயிரோ இறைவனின் அன்பைப் பெறத் துடித்துக் கொண்டிருப்பது. இதிகாசங்களிலும் புராணங்களிலும் அவதாரங்களிலே உலகில் திருமால் அவதாரம் செய்தபோதும், அவனைக் காதலித்த பெண்டிர்

எத்தனை எத்தனை பேர்! ஆழ்வார் அவர்களை எல்லாம் நினைவு கூர்கிறார். அவர்களுடன் தாமும் ஒருவராகக் கருதிக்கொள்கிறார். உதாரணமாகக் கோகுலத்துக் கோபியர் போல இறைவனிடம் ஆழ்ந்த அன்பு செலுத்தியவர்களுள் ஒருத்தியாகத் தம்மை பாவித்துக் கொள்கிறார்.

இப் பாசுரத்தில் நம்மாழ்வார் கண்ணனைப் பிரிந்த ஒரு கோபியின் தவத்தைப் பேசுகிறார்.

வேய் மருதோள் இணை மெலியுமாலோ!
மெலிவும் என் தனிமையும் யாதும் நோக்கா
காமரு குயில்களும் கூவு மாலோ
கணமயில் அவை கலந்தாலுமாலோ,
ஆமருவின நிரை மேய்க்க நீ போக்கு
ஒரு பகல் ஆயிரம் ஊழியாலோ
*தாமரைக் கண்கள் கொண்டீர்தியாலோ*
தகவிலை தகவிலையே நீ கண்ணா.

[10–3–1]

தகவிலை தகவிலை யே நீ கண்ணா
தடமுலை புணர்தொறும் புணர்ச்சிக்காரச்
சுக வெள்ளம் விசும்பிறந்து அறிவை சூழ்க்கச்
சூழ்ந்து அது கனவு என நீங்கி ஆங்கே
அகலுயிர் அகமகந்தோறும் உள்புக்கு
ஆவியின் பரமல்ல வேட்கை அந்தோ
மிகமிக இனி உன்னைப் பிரிவையாமல்
வீவ நின் பசுநிரை மேய்க்கப் போக்கே

[10–3–2]

அடுத்த பாசுரத்தின் இறுதியில் கோபி தனக்காக மட்டுமன்றி, தமது இதயங்களைக் கண்ணனிடம் தொலைத்துவிட்ட கோபியர்கள் அனைவருக்குமாய் பேசுகின்றாள்.

வீவன், நின் பசு நிரை மேய்க்கப் போக்கு
வெவ்வுயிர் கொண்டெனது ஆவி வேமால்
யாவரும் துணையில்லை யான் இருந்து உன்
அஞ்சன மேனியை ஆட்டம் காணேன்.
போவது அன்று ஒரு பகல், நீ அகன்றால்
பொரு கயல் கண் இணை நீரும் நில்லா;

சாவது—இவ் ஆய்க்குலத்து ஆய்ச்சியோமாய்ப்
பிறந்த இத்தொழுத்தையோம் தனிமை தானே [10–3–3]

முன் இரவில் காதலன் பேசிய காதல் பேச்சை கோபி நினைத்துப் பார்க்கிறாள். இந்த நினைவே துக்கம் தருகிறது. அப்போது இவளுக்கு மாலை என்பதே அவளை நசுக்க வந்த ஒரு மதம் கொண்ட யானை போலத் தோன்றுகிறது; தென்றலோ பயங்கரமான மல்லிகை மணத்தை வீசுகிறது. இதனை எப்படித் தாங்குவேன் என்று தவிக்கிறாள். தன்னைப் போலவே இன்னும் பலர் அவனை விரும்புவர் என்று அவளுக்கு தோன்றுகிறது. [ஏன் இராது? அவன்தான் எல்லா ஆன்மாக்களுக்கும் நாயகன் ஆயிற்றே.] அவர்கள் அவன் போகுமிடத்தில் அவனுக்காகக் காத்திருக்கிறார்களோ என்னவோ. இருக்கட்டுமே. இங்கே நாங்கள் கண்ணீருடன் இருக்கிறோம். நெஞ்சங்கள் நடுங்குகின்றன. 'போகாதே அங்குப் போவாயெனில் எமது உயிர்கள் மெழுகாய் உருகிவிடும்'. இப்போது அவளுக்கு ஒரு சந்தேகம் எழுகிறது. இதுபோதுவரை தனது துயரத்தை மட்டுமே நினைத்து வந்தவள், இப்போது தனது நாயகனுக்குக் காட்டிலே பொல்லாத அசுரர்களால் ஏதேனும் தீங்கு விளையுமோ என அஞ்சுகிறாள். 'போகக்கூடாது அங்குப் போகலாகாது' எனக் கூவுகிறாள். வேண்டுமானால் அவன் என்னிடம் இராமல் அவனது தாமரைக் கண்ணையும் வாயையும் கைகளையும் வேறு சிற்றிடைப் பெண்டிரிடம் பொருத்தி இருக்கட்டும். பரவாயில்லை. அவன் அருகிருந்தால் போதும்'.

காதலிலே பித்தான ஒரு பெண் காதலனை முழுதும் தனக்கே சொந்தமாக்கிக் கொள்ளும் நினைப்புடன் இருப்பது இயல்பு. அவளிடமா இப்படிப்பட்ட எண்ணம் எழுகின்றது என வியப்பாக இருக்கும்.

இந்தத் திருவாய்மொழியில் ஆழ்வார் ஒரு கோபியாக உரையாடுவதோடு, கோபியே நம்மாழ்வாராகி விடுகிறாள். இந்தப் பத்துப் பாசுரங்களிலும் உள்ள இதயத்துடிப்பு ஆழ்வாருடையதே யாகும்.

[10–3]

நேர்ப்படவோ, புராண கதா பாத்திரமாகவோ காதல் வயப்பட்ட நங்கையாக இருப்பது தவிர தமது பாடல்களில், திருவிருத்தத்தில் போல ஆழ்வார் நங்கையின் தாயாகவும், தோழியாகவும்,

சேவகியாகவும், கட்டுவச்சியாகவும் இருக்கக் காண்கிறோம். ஒவ்வொரு குறியீடும் ஒரு தனித் திருவாய்மொழியில், அதுவே ஒரு முழுமையான கவிதையின் வேகத்துடன் தெளிவுடன் விளங்கக் காணலாம். இந்தக் குறியீடும் வேறொன்றுடன் கலந்து இருப்பதில்லை.

இதோ ஒரு பாசுரம். ஆழ்வார் காதல் வயப்பட்ட நாயகியாகித் தனது தோழிகளுடன் பேசுகிறார்.

> மானேய் நோக்கு நல்லீர்! வைகலும் வினையேன் மெலிய
> வானோர் வண் கமுகும் மதுமல்லிகையும் கமழும்
> தேனார் சோலைகள் சூழ் திருவல்ல வாழ் உறையும்
> கோனாரை, அடியேன் அடி கூடுவது என்று கொலோ?
>
> [5–9–1]

இன்னொரு பாசுரத்தில் காதல் வயப்பட்ட ஆயர்குலப் பெண், தனது நாயகன் திரும்பி வரத் தாமதமாதல் குறித்துக் கோபிக்கிறாள்.

> போகுநம்பீ! உன் தாமரை புரை
> கண் இணையும் செவ்வாய் முறுவலும்
> ஆகுலங்கள் செய்ய, அறிதற்கே
> நோற்றோமே யாம்.
> தோகை மா மயிலார்கள் நின்னருள்
> சூடுவார் செவி ஓசை வைத்து எழ
> ஆகள் போகவிட்டுக் குழல் ஊது
> போயிருந்தே.
>
> [6–2–2]

அடுத்த திருவாய்மொழியினுள் பேசும் பெண் இன்னும் முதிர்ச்சி யடையவில்லை. அவள் ஒரு சிறு பெண் குழந்தை, தோழிகளுடன் மணல்வீடு கட்டி அதிலே குடித்தனம் நடத்தி விளையாட்டு விளையாடுகிறாள் போல இருக்கிறது. அவளது குறை இதுவே: பகவான் கண்ணன் வரவில்லை. வந்து அருகே மலர்ச்சியான புன்னகையுடன் இந்த மணல் வீடுகளை அங்கீகரித்த பாணியில், இச் சிறுமிகள் விளையாட்டாக சோறென வழங்குவதை ஏற்கவும் இல்லையே—என்பதே இவள் குறை, பாமர மக்கள் சில்லறை முயற்சிகளில் இறைவனின் அருளை வேண்டும் சின்னத்தனத்தை உருவகமாகக் காட்டுகிறது பாடல். இவற்றை அவன் சிந்தமாட்டான்,

மக்கள் அவனை நாட வேண்டும். ஒரு தாயின் கூற்றாக அடுத்து வரும் பாசுரத்தில் வரும் தலைவியோ முதிர்ச்சியடைந்தவளாகத் தோன்றுகிறாள்.

உகவையால் நெஞ்சம் உள் உருகி
உன் தாமரைத் தடம்கண் விழிகளின்
அக வலைப்படுப்பான் அழித்தாய் உன் திருவடியால்
தகவு செய்திலை; எங்கள் சிற்றிலும்
யாமம்அடு சிறுசோறும் கண்டு. நின்
முகஒளி திகழ முறுவல் செய்து, நின்றிலையே.

[6–2–9]

மாலுக்கு வையம் அளந்த மணாளற்கு
நீலக் கருநிற மேக நியாயற்கு
கோலச் செந்தாமரைக் கண்ணற்கு,
என் கொங்கலர்
ஏலக் குழலி இழந்தது சங்கே

6–6–1

'சங்குவளை இழந்தது' என்பது கவிதை மரபிலே காதல் வயப்படுவது, இதயத்தை இழப்பது என்று பொருள்படும்.

தாயார் மேலும் சொல்லிக்கொண்டே போகிறாள்: என் மகள் அவளது அழகிய நிறத்தை இழந்துவிட்டாளே, [6–6–2]; என் கண்புனை கோதை இழந்து கற்பே [6–6–5]; 'என் கற்புடையாட்டி இழந்தது கட்டே' [6–6–10]

பக்தி இலக்கிய வகையில் நாயகி பாவம் பற்றிப் பழக்கமிராதவருக்கு அடுத்துவரும் பாசுரங்கள் – தாயின் கூற்றாக வருபவை – மிகைப்படுத்தப் பட்டவையாகத் தோன்றலாம். திருக்கோளூர் பெருமானைப் பற்றியவை இப்பாடல்கள். இந்த ஊர் நம்மாழ்வார் பிறந்த ஊருக்கு அருகில் உள்ளது.

'உண்ணும் சோறு, பருகு நீர்
தின்னும் வெற்றிலையும் எல்லாம்
கண்ணன் எம்பெருமான்'

என்றென்றே கண்கள் நீர்மல்கி
மண்ணினுள் ... அவன் சீர் வளம் மிக்கவன்
ஊர் வினவி
திண்ணம் என் இளமான் புகும்
ஊர் திருக்கோளூரே

[6–7–1]

ஊரும் நாடும் உலகமும்
தன்னைப்போல், அவனுடைய
பேரும் தார்களுமே பிதற்றக்
கற்பு வான் இடறி,
சேரு நல் வளஞ்சேர் பழனத்
திருக்கோளூர்க்கே
போருங்கொல் உரையீர்
கொடியேன் கொடி பூவைகளே!

[6–7–2]

பூவை, பைங்கிளிகள், பந்து,
தூதை பூம்புட்டில்கள் யாவையும்
திருமால் திருநாமங்களே
கூவி எழும் என்பாவை
போய் இனித் தன் பழனத்
திருக்கோளூர்க்கே
கோவை வாய் துடிப்ப
மழைக் கண்ணொடு
என் செய்யும் கொலோ? [6–7–3]

தாயின் கூற்றாக அடுத்து வரும் பாசுரத்தில் அவள் திருமாலையே குழப்பத்துடன், வேதனையுடன் கேட்கிறாள்; எனது பெண்ணை என்ன செய்துவிட்டாய், இன்னும் என்ன என்ன செய்யப் போகிறாய்? என்று:

கங்குலும் பகலும் கண் துயில் அறியாள்
கண்ணநீர் கைகளால் இறைக்கும்.
சங்கு சக்கரங்கள் என்று கைகூப்பும்
'தாமரைக் கண்' என்றே தளரும்
'எங்ஙனே தரிக்கேன் உன்னைவிட்டு"? என்னும்
இருநிலம் கைகுழா விருக்கும்
செங்கயல் பாய் நீர்த் திருவரங்கத் தாய்
இவள் திறத்து என் செய்கின்றாயே?

[7–2–1]

இட்ட கால், இட்ட கையளாய் இருக்கும்;
எழுந்து உலாய் மயங்கும்; கை கூப்பும்
'கட்டமே காதல்' என்று மூர்ச்சிக்கும்
'கடல் வண்ணா! கடியை காண்' என்னும்
'வட்டவாய் நேமி வலங்கையா, என்னும்
'வந்திடாய்' என்றென்றே மயக்கும்,
சிட்டனே! செழுநீர்த் திருவரங்கத்தாய்!
இவள் திறந்து என் சிந்தித்தாயே?

[7–2–4]

தனது நிலையைக் கடவுளுக்குத் தெரிவிக்கும்படி பறவைகளையும் வண்டையும் தூது அனுப்பும் பாடல்களாக நான்கு அருமையான திருவாய்மொழிகள் இயற்றியுள்ளார் நம்மாழ்வார். முதலில் நாரைக்கு விடும் வேண்டுகோள் இது:

அஞ்சிறைய மட நாராய்! அளியத்தாய்,
நீயும் நின் அஞ்சிறைய சேவலுமாய்
ஆவா என்று எனக்கு அருளி
வெஞ்சிறைப்புள் உயர்த்தாற்கு
என் விடு தூதாய்ச் சென்றக் கால்,
வன் சிறையில் அவன் வைக்கில்,
வைப்புண்டால் என் செய்யுமோ?

[1–4–1]

இதன் உட்பொருள் என்ன என்பதை நம்பிள்ளை குறிப்பிடுகிறார். சர்வேஸ்வரனால் சிறைப்படுதலைவிட வேறு பேறு ஒன்று இருக்குமோ? அந்த சிறை அவனது இதயச் சிறையாகத்தானே இருக்கும்?

ஆழ்வார் குயிலையும் அன்னத்தையும் நீல மகன்றிலையும் வேண்டுகிறார்;

'என் நீர்மை கண்டிரங்கி
இது தகாது என்னாத
என் நீல முகில் வண்ணற்கு
என்சொல்லி யான் சொல்லுகேனோ?
நன்னீர்மை இனி அவர் கண்
தங்காது என்று ஒருவாய்ச் சொல்,
நன்னீல மகன்றில் காள்
நல் குதிரோ, நல்கிரோ

[1–4–4]

இதன் பின்னர் ஆழ்வார் குருகையும் ஆழிவரி வண்டையும் இளங்கிளியையும் சிறு பூவைகளையும் விளிக்கிறார். ஊடாடும் பனிவாடைக் காற்றையும் அழைத்தபின் தனது மனத்தையே பார்த்துப் பேசுகிறார். இந்த வேண்டுகோள் யாவும் பயனற்றுப்போயின போலும், ஒரு தூதனிடம் கோபமாக வெடிக்கிறது:

நீ அலையே சிறு பூவாய்!
நெடுமாலார்க்கு என் தூதாய்
நோய் எனது நுவல் என்ன, நுவலாதே
இருந்து ஒழிந்தாய்!
சாயலொடு மணி மாமை தளர்த்தேன் நான்;
இனி உனது
வாய் அலகில் இன் அடிசில் வைப்பாரை
நாடாயே.

[1–4–8]

காற்றைப் பார்த்துப் பேசும்பாடல் வேதனை நிறைந்தது:

நாடாத மலர் நாடி நாள்தோறும் நாரணன் தன்
வாடாத மலர் அடிக் கீழ் வைக்கவே வகுக்கின்று.
வீடாடி வீற்றிருந்தல் வினையற்றது என் செய்வதோ?
ஊடாடு பனிவாடாய்! உரைத்து ஈராய் எனது உடலே.

[1–4–9]

கடவுளிடம் தூது அனுப்ப இங்கே காற்றை அழைக்கவில்லை; இந்த வேதனையையும் வாழ்வையும் முடிப்பதற்கே அழைக்கிறாள் நாயகி.

வேறொரு திருவாய்மொழியில் [ஆறாம் பத்து, முதல் திருவாய்மொழி], இப்போது ஆழ்வாருக்கு மிக அருகே திருவண்டூரில் உறையும் பெருமானிடம் தூதாக அனுப்புகிறார். [இந்த ஊர் கேரளத்தில் கொட்டாரக்கராவின் அருகில் உள்ளது] இந்தத் திருவாய்மொழியில் நம்பிக்கை தொனிக்கிறது. காற்றைக் கடியவில்லை ஆழ்வார். வேறொரு திருவாய்மொழியில் கடவுளின் காதல் வண்டுகளை அழைத்து ஆண்டவனிடம் தூது போவதுடன், அவனது துளசி மணத்தையும் வாய் நிறைய ஏந்தி வந்து தனது கூந்தல் மலர்மீது வீசும்படி வேண்டுகிறாள். [6–8–3]

தலைவனை எங்குச் சென்றாகிலும் தேடிக் கண்டுபிடித்து அவனிடம் தன் வேதனை நிலையைத் தெரிவிக்கும்படி தான் அருமையாக வளர்த்த கிளிகளிடம் கேட்டுக் கொள்கிறாள்.

மற்றொரு திருவாய்மொழிப் பாசுரத்தில் [ஒன்பதாம் பத்து, ஏழாம் திருவாய்மொழி] திருமூழிக்களம் என்னும் ஊரில் பெருமானிடத்து அதே பறவைகளும் வண்டுகளும், தூது அனுப்பப்படுகின்றன.

இந்தத் தலமும் கேரளத்தில் அங்கமலைக்கு அருகில் உள்ளது. இங்கே [இவை 'நல்ல' பறவைகள் போலும்] காதல் நாயகி, உறுதி கூறுகிறாள்: 'எனது செய்தியை மேகவண்ணனிடம், மூஉலகும் படைத்தவனிடம், கூறிவிட்டால் நீங்கள் எல்லாம் எல்லா உலகையும் மேலாக, தேவர்களின் பொன் உலகையும் ஆள்வீர்கள்.

ஆனால் அந்தக் தூதுவர்கள் திரும்பு முன்னர் [அவர்கள் திரும்புவார்களா என்ன?] அமைதியற்ற நாயகியானவள் காதல் வசப்பட்டுத் திருநாவாய் என்றும் தலத்தின் சந்நிதிக்குச் சென்று இறைஞ்சுகிறாள்:

"என்சொல்லி உய்வன் இங்கு அவனை விட்டே"
[ஒன்பதாம் பத்து, எட்டாம் திருவாய்மொழி]

கடவுளைத் தேடலும் காண்தலுமான இக் குறிப்பான கருத்தே திருவாய்மொழிப் பாசுரங்கள் அனைத்திலும் சரடாக வெளிப்படுகிறது. இந்தப் பாசுரங்களின் ஏற்றம் இவற்றின் தத்துவச் சிறப்பால், நம்மாழ்வாரின் ஆன்ம வாழ்வு அனுபவங்களின் வெளிப்பாட்டால், அவரது அற்புத அனுபவங்களை வெளியிடும் முறையால், வகைகளிலும் ஆழத்திலும் குழப்பமிக்க அவற்றின் வண்ணங்களால், புலப்படுகிறது.

# 7

## மெய்ப் பொருளை நோக்கி யாத்திரை

ஆன்மா பொறுமையின்றி அலைபாய்கிறது. தன்னைச் சூழ உள்ளவற்றை உரைத்துப் பார்த்து எல்லாவற்றையும் ஒதுக்குகிறது. இம்மாதிரி நிலைமையில் தான் மெய்ப்பொருளை நோக்கி நம்மாழ்வாரின் யாத்திரை தொடங்குகிறது. இத்தகைய யாத்திரைகளின் தொடக்கம் இப்படித்தான் பொதுவாக அமையும். உலக வாழ்வின் சிறுமையும் நிலையின்மையும் இவருக்குத் தெளிவாகப் புலனாகிறது.

அடிசேர் முடியினராகி அரசர்கள் தாம் தொழ
இடிசேர் முரசங்கள் முற்றத்து இயம்ப இருந்தவர்
பொடிசேர் துகளாய்ப் போவார்கள்

4–1–3

வாழ்ந்தார்கள் வாழ்ந்தது மாமழை மொக்குகளின் மாய்ந்து
மாய்ந்து ஆழ்ந்தார் என்று அல்லால் அன்று முதல் இன்று
அறுதியா வாழ்ந்தார்கள் வாழ்ந்தே நிற்பர் என்பதில்லை.

4–1–6

மனித உறவுமுறைகள் தற்செயலாக நிகழ்பவை. என்றுமே சார்ந்து நிற்க முடியாதவை என்கிறார். நம்மைச் சூழ உள்ளது ஓர் இருண்ட உலகம். திருப்தி காண இயலாத உலகம்.

நண்ணாதார் முறுவலிப்ப நல்லுற்றார் கரைந்து ஏங்க
எண்ணராத் துயர் விளைக்கும் இவை என்ன உலகுஇயற்கை?

4–9–1

சாமாறும் கெடுமாறும் தமர் உற்றார் தலைத் தலைப் பெய்து
ஏமாறிக் கிடந்து அலற்றும் இவை என்ன உலகு இயற்கை?

4–9–2

'கொள்' என்று கிளர்ந்து எழுந்து பெருஞ் செல்வம் நெருப்பாக
'கொள்' என்று தமம் மூடும் இவை என்ன உலகு இயற்கை?

4–9–4

மறுக்கி வல் வலைப்படுத்திக் குமைத்திட்டுக் கொன்று உண்பர்
அறப்பொருளை அறிந்தோர் ஆர், இவை என்ன உலகு இயற்கை?

4-9-6

இவற்றிலெல்லாமிருந்து விடுபட்டு ஆழ்வார் ஆண்டவனை நோக்கித் திரும்புகிறார். அதுவே மிகச் சிறந்த மெய்ப்பொருளும், ஆன்ம வேட்கையைத் தணிக்கும் பொருளும் அன்றோ? ஆழ்வார் கூறுகிறார்.

அந்நாள் நீ தந்த ஆக்கையின் வழி உழல்வேன்
வெந்நாள் நோய் வீய வினைகளை வேர் அறப்பாய்ந்து
எந்நாள் யான் உன்னை இனிவந்து கூடுவனே.

3-2-1

கூவிக் கூவிக் கொடுவினைத் தூற்றுள் நின்று
பாவியேன் பலகாலம் வழி திகைத்து அலமர்கின்றேன்
மேவியன்று ஆநிரை காத்தவன் உலகமெல்லாம்
தாவிய அம்மானை எங்கு இனித் தலைப் பெய்வனே

3-2-9

இந்த உலகமே காடாகவும் வழி திகைக்கும் புதர், பாதையாகவும் படுகிறது. இதிலிருந்து விடுபட விரும்புகிறார் ஆழ்வார். அவற்றை விடுவது எளிதாக இல்லை. உடலும் பொறிகளும் அவற்றிலே கட்டுண்டு கிடக்கின்றன. அதுமட்டுமல்ல, பொறிகளோ இந்தப் பிணைப்பிலே மகிழ்ந்து போகின்றன. அதிலே இன்னும் ஆழ்ந்து போகவே விரும்புகின்றன. ஆழ்வார் இந்த நிலைக்குக் குறைப்படுகிறார்; இதற்கெல்லாம், தாம் தேடி விழையும் மெய்ப்பொருளே காரணம் எனவும் குற்றம் சாட்டுகிறார்.

என்னை ஆளும் வன்கோ ஓர் ஐந்து
இவ்வை பெய்து இராப்பகல் மோதுவித்திட்டு
உன்னை நான் அணுகா வகை செய்துபோதி கண்டாய்

7-1-2

தீர் மருந்து இன்றி ஐந்து நோய் அடும்,
செக்கில் இட்டுத் திரிக்கும் ஐவரை,
நேர் மருங்கு உடைத்தா அடைதது
நெகிழ்ப்பான் ஒக்கின்றாய்
ஆர் மருந்து இனி ஆகுவார்? அடல் ஆழி ஏந்தி
அசுரர் வன்குலம்
வேர் மருங்கறுத்தாய் விண்ணுளார் பெருமானேயோ!

7-1-5

இது எப்படி நேர்கிறது? புலன்களின் இந்தக் குரூர ஆட்டம் எப்படி நேர்கிறது?

தூது நான் அறியாவகை சுழற்றி ஓர்
ஐவரைக் காட்டி, உன் அடிப்போது
நான் அணுகாவகை செய்து போதி கண்டாய்,

7–1 –4

உலக வாழ்வே பெரிதாகக் காட்டும் இந்தப் புலன்களையும் மனத்தையும் வெற்றி கொள்வது முதல் படியாகும். இவற்றை வாட்டி வருந்திஞல் வெல்ல முடியுமா? தவமுறைகள், உடலையும் உள்ளத்தையும் வருத்தும் கடும் விரதங்கள் பற்றியெல்லாம் நம்மாழ்வார் அறிவார். அவர் மேலும் அறிவார், இறைவனிடம் பற்று வைப்பது என்ற முறை ஒன்றாலேயே உலகப் பற்றை விட முடியும் என்பதை. இதை விட்டு விடத்தானே தவமுனிவர்கள் முயல்கிறார்கள். ஆன்ம அறிவு பெற இது அவசியமன்றோ? [வீடுமின் முற்றவும் — வீடு செய்து உம் உயிர் வீடுடையானிடை — வீடு செய்ம்மினே. 1—2—1]

தன் உடலை வருத்தித் தவம் செய்வதாவது கடவுளிடம் சேர்க்காது, தற்பெருமைக்கும் குறுகிய மனத்திற்கும் பகட்டுக்குமே வழியாகும் என்று ஒரு கருத்து உண்டு. நம்மாழ்வார் இப்படிக் கருதவிலலை. உடலின திறன்களையும் அவை இழுக்கும் உலகத்தையும் வெல்லும் வழி அவற்றிலிருந்து விலகுவதால் மட்டுமல்ல [அபபடியும முடியுமா?] அவற்றையெல்லாம் கடவுள்பால் செலுத்தி, அவற்றின் உலகாயத நோக்கத்தின திசைமாற்றுதலே வெல்லும் வழி எனக் கண்டார். இந்த நோக்கிலே இவர் தமிழ் முனிவர் திருவள்ளுவரைப் போல விளங்குகிறார்.

இது சாத்தியமா? கடவுளைப் பற்றி எதுவுமே தெரியாத ஓர் உள்ளம் இந்த நிலையை எப்படி எட்டும்? நம்மாழ்வார் கூறுகிறார்; 'ஊர் ஆ மிலைக்கக் குருட்டு ஆ மிலைக்கும் என்னும் அப்படி' [திருவிருத்தம் 94] தான் சேர வேண்டிய தொழுவம் அங்கேதான் என்பது குருட்டுப் பசுவுக்கு எப்படித் தெரியும்? ஊர்ப்பசுக்கள் போக்கைக் கண்டு அதுவும் மகிழ்வுடன் பின்பற்றும். இது யாத்திரையின் மூன்றாவது படி. ஈசுவரனின் விவரிக்க முடியாத இயல்பை உணர்த்தும் அவனையே பற்றுக்கோலாயும், அடையும் லட்சியமாகவும் கொள்கிறார். மெய்ப்பொருளின் மகத்துவமும், அதை எட்டவும் அளக்கவும் இயலாத தனது சிறுமையும் புலஞகின்றன ஆழ்வாருக்கு. அறிய முடியாத பொருள் என்கிருர் ஆண்டவனை:

உணர்ந்து உணர்ந்து இழிந்து அகன்று
உயர்ந்து உருவியந்த இந்நிலைமை
உணர்ந்து உணர்ந்து உணரிலும்
இறைநிலை உணர்வு அரிது உயிர்காள்

1–3–6

இனையாய் இனைய பெயரினாய்
என்று நைவன் அடியேனே

1–5–6

பிணக்கற அறுவகைச் சமயமும் நெறி உள்ளி உரைத்த
கணக்கறு நலத்தனன் அந்தம் இல் ஆதி அம் பகவன்
வணக்குடத் தவநெறி வழிநின்று புறநெறி களைகட்டு
உணக்குமின் பசையற! அவனுடை உணர்வு கொண்டு
உணர்ந்தே. [1–3–5]

இது ஒரு விசித்திர நிலைமை. கடவுளை அடைய வேறு எதிலும் பற்று இருத்தல் ஆகாது. பற்றினை விடுவதற்கு அவனையே பற்ற வேண்டும். அவனையோ யாரும் அறியார். ஆழ்வார் தமது சிறுமையை முற்றும் உணர்ந்தவராய், உலக விஷயங்களில் தன்னை ஈர்க்கும் புலன்களுக்கும் மனத்திற்கும் தானே இரையாகிப் போய் விடுவோம் என்பதை உணர்ந்தவராய்ப் பேசுகிறார்.

அடியேன் சிறிய ஞானத்தன்
அறிதல் ஆர்க்கும் அரியானை...
அடியேன் காண்பான் அலற்றுவன்
இதனில் மிக்கோர் அயர்வு உண்டே?

[1–5–7]

சீலம் இல்லாச் சிறியனேலும்
செய்வினையோ பெரிதால்
'ஞாலம் உண்டாய்!
ஞான மூர்த்தி!
நாராயணா! என்று என்று
காலந்தோறும் யான் இருந்து கைதலை பூசலிட்டால்
கோலமேனி காண வாராய் கூவியும் கொள்ளாயே.

4–7–1

[செய்வினை — நம்பிள்ளை தமது உரையில் 'வினை' என்பதற்குப் பாவச் செயல் என்று பொருள் கொள்கிறார். இங்கு நம்மாழ்வார் இறைவனின் கருணை அளப்பரியது. ஆனால் அதனைவிடப்

பெரிதாக இருக்கிறதே தனது பாவங்கள் என்று ஏங்குகிறாராம். வினை அல்லது தர்மம் என்பதற்கு உலகியல் செயல்கள், புலன்களும் மனமும் சேர்ந்து இயற்றும் தொழில்கள் என்றும் பொருள் கொள்ளலாம்.]

நோக்கி நோக்கி உன்னைக் காண்பான் யான் எனது ஆவியுள்ளே
நாக்கு நீள்வன் ஞானமில்லை நாள்தோறும் என்னுடைய
ஆக்கையுள்ளும் ஆவியுள்ளும் அல்ல புறத்தினுள்ளும்
நீக்கமின்றி எங்கும் நின்றாய்! நின்னை அறிந்து அறிந்தே.
4—7—6

நான் அறியாதவன்தான், ஆனால் ஒன்று மட்டும் அறிவேன்: இறைவன் இருக்கிறான், அவன் எல்லாம் அறிவன் என்பதை அறிவேன் எனவே அவனை அழைக்கிறேன். அவனது உண்மை இயல்புக்கு ஏற்ப அவனும், நான் எவ்வளவுதான் தகுதியற்றவனாக இருப்பினும், எனக்குத் தன்னை வெளிப்படுத்த வேண்டுகிறேன்.

ஒன்று சொல்லி ஒருத்தினில் நிற்கிலாத
ஓர் ஐவர் வன்கயவரை
என்று யான் வெல்கிற்பன் உன் திருவருள் இல்லையேல்!
7—1—7

குலமுதல் அடும் தீவினைக் கொடு வன்குழியினில் வீழ்க்கும்
ஐவரை
வல முதல் கெடுக்கும் வரமே தந்தருள் கண்டாய்
7—1—9

இன்னமுது எனத் தோன்றி ஓர் ஐவர்
யாவரையும் மயக்க, நீ வைத்த
முன்னம் மாயமெல்லாம் முழுவேர் அரிந்து
7—1—8

தன்னைப் புலன்களும் இந்த உலகும் கட்டியுள்ள தளைகளைக் களைய நம்மாழ்வார் நாடும் மெய்ப்பொருளானது அறிவுபூர்வமான நுட்சுமமான ஒன்று அன்று, அளவிலா அழகு பொருந்திய அந்தக் கடவுள் மூர்த்தி ஆன்மாவை மட்டுமன்றி மனிதத் திறன் அனைத்தையும் மகிழ்விக்கவலியதாகும். [நம்மாழ்வாரின் தத்துவம் என்ற பகுதி பார்க்க]. கடவுளின் அழகிலும் அருளிலும் ஈடுபட்டவாறே நம்மாழ்வார் இவ்வுலக பந்தங்களை உதற முயல்கிறார். அந்த அனுபவத்தைப் பற்றிப் பேசுவதா, என்னால் எப்படி முடியும்? எவ்வளவு தான் இனிமையாக இருந்தாலும் தாமரை உன் கண்களுக்கும் உனது பாதங்களுக்கும் திருக்கரங்களுக்கும் ஈடாகுமா? எவ்வளவுதான் புடம் போட்ட பொன்னானாலும் அது உன் திருமேனியின் ஒளிக்கு ஈடாகுமோ? இந்த உலகில் உள்ள

பெரிதானதும் உயர்வானதும் எதுவுமே உன்முன் சோபிக்காது.

கட்டுரைக்கில் தாமரை நின்கண் பாதம் கை ஒவ்வா
சுட்டு உரைத்த நன்பொன் உன் திருமேனி ஒளி ஒவ்வாது
ஒட்டுரைத்து இவ்வுலகு உன்னைப் புகழ்வெல்லாம்
பெரும்பாலும் பட்டுரையாய்ப் புற்கு என்றே காட்டுமால்
பரஞ்சோதி!

3–1–2

இந்த நிலையில் ஆழ்வார் தமது புலன்களையும் திறன்கள் அனைத்தையும் கடவுளின் இந்த அழகினை அனுபவிப்பதில் காட்டுகிறார். இவ்வாறு பயின்று அப்புலன்களையும் திறன்களையும் திசை திருப்புகிறார். என்றும் நிறைந்த பெரும்பொருளிடம் ஈடுபடுத்துகிறார். இவ்வாறு அப்புலன்களின் மீது ஆதிக்கம் கொள்கிறார்.

முடியானே! மூ உலகம் தொழுது ஏத்தும் சீர்
அடியானே... என்று கிடக்கும் என் நெஞ்சமே

[3–8–1]

நெஞ்சமே நீள்நகராக இருந்த என்
தஞ்சனே... என்னும் எப்போதும் என் வாசகமே.

3–8–2

வானவர்தம் நாயகனே... என்று தடவும்
என் கைகளே

3–8–3

கைகளால் ஆரத் தொழுது தொழுது உன்னை
வைகலும் மாத்திரைப் போதுமோர் வீடின்றி
உன்னை மெய் கொள்ளக் காண விரும்பும் என் கண்களே

பண்கொண்ட புள்ளின் சிறகுஒலி பாவித்து 3–8–4
திண் கொள்ள ஓர்க்கும் கிடந்து என் செவிகளே 3–8–5

செவிகளால் ஆர நின் நேர்த்திக் கனி என்னும்
கவிகளே காலப் பண் தேன் உறைப்பத் துற்று
புவியின் மேல் பொன் நெடும் சக்கரத்து உன்னையே
அவிவு இன்றி ஆதரிக்கும் எனது ஆவியே

3–8–6

கோலமே, தாமரைக் கண்ணதோர்
அஞ்சன நீலமே
நின்று எனது ஆவியை ஈர்க்கின்ற சீலமே!

3–8–8

ஆழ்வார் பரம்பொருளைத் தேடும் முயற்சியில் இந்த நிலையிலே அவருக்கு இந்த உலகம் எல்லாம் — புலன்கள் ஈடுபட்டு வளரும் இந்த உலகமும் பிரபஞ்சம் எல்லாமும் — இறைவனின் இருப்பிடமாகத் தோன்றுகின்றன. அத்தனை குறைகள் கொண்டிருந்தும் இந்த வையகம் வானுலகுக்கு வாசலாகிறது. புலன்கள் எல்லாம் இந்தக் கருத்தில் செயலாற்றப்படுகின்றன. ஒரு வித்தியாசம், அவை இப்போது பௌதிகப் பொருள்களுடன் பிணைந்திருக்கவில்லை; லோகாயதத்திலிருந்து. அவற்றின் வாயிலாகவே ஈசுவரனை எட்டுகின்றன. வெளி உலகத்தின் அழகெல்லாம் கண்ணுக்குத் தெரியாத உள் உலகத்தின் அழகாகும். அதுமட்டுமா? அது மெய்ப்பொருளையே உணர வைக்க வல்லதுமாகும். தொடக்கத்தில் போல இப்போது ஆழ்வார் மெய்ப்பொருள் நாடும் முயற்சியில் உலகைவிட்டு விலகவில்லை. அதற்கு மாறாக, அவர் உலகத்துக் காட்சிகளிலும் ஓசைகளிலும் ஆனந்தமாக ஈடுபடுகிறார். வெயில், மழை, மலர், மலை, கடல், குளிர், பசும்வயல், தோப்பு என்று எல்லாமும் இறைவனுடையவை: அவன் அழகைப் பிரதிபலிப்பவை. இப்போது ஆழ்வாருக்கு இயற்கைப் பொருள் எதுவுமே இறைவனின் அளப்பரிய அருளை நினைவூட்டும் பொருளாகிறது, பல தருணங்கள் அப்பொருள்கள் ஆண்டவனிடமிருந்து தான் தனித்து விடப்பட்டதை நினைவூட்டும் தன்மையாய் உள்ளன.

இந்த ஆன்ம யாத்திரையின் அடுத்த நிலையில் நம்மாழ்வார் ஒரு நொடி இறை தரிசனம் பெற்றவராகிறார். ஒரு குறிப்பிட்ட திருவாய்மொழியிலே [4–7] முதல் ஆறு பாசுரங்களில் கடவுள் இன்னும் வரவில்லையே என்று குறைப்படுகிறார். இப்பாசுரங்கள் செயலிழந்த நிலைமையை வெளிப்படுத்துவன. ஏழாவது பாசுரம் ஆழ்வாரின் ஆனந்தக் களிப்பை வெளியிடுகிறது. 'நான் உன்னைக் கண்டுகொண்டேன். நறுந் துழாயின் கண்ணி அம்மா!' அடுத்த பாசுரங்கள் தேடிக் காணமுடியாத வேதனையைத் தெரிவிக்கின்றன.

> 'தடவுகின்றேன் எங்குக் காண்பன்,
> சக்கரத்து அண்ணலையே!
>
> 4–7–9
>
> ... என்று தாழ்ந்து கண்ணீர் ததும்ப
> பக்கம் நோக்கி நின்று அலந்தேன்
> பாவியேன் காண்கின்றிலேன்
>
> 4–7–10

கணநேரம் கடவுளைக் கண்ட அனுபவங்களுடன் ஆழ்வாரின் ஆழ்ந்த நம்பிக்கைகளும் சேர்கின்றன. திருமாலின் பல்வேறு திருஅவதார லீலைகளை நினைத்து அவரிடம் ஓர் ஆனந்தக் கூவல், கொண்டாட்டம் எனத் ததும்பபடி வெடித்து வெளிபடுகிறது. 'மண்மிசைப் பெரும்பாரம் நீங்க ஓர் பாரத மாபெரும் போர் பண்ணி மாயங்கள் செய்து, சேனையைப் பாழ்பட நூற்றிட்டுப் போய் விண் மிசைத்தன தாமமே புக மேவிய சோதி தன் தாள் நண்ணி நான் வணங்கப் பெற்றேன். எனக்கு ஆர் பிறர் நாயகரே?'

[திருவாய்மொழி 6–4–10]

'பூவியல் நால் தடந்தோளள்
பொருபடை ஆழிசங்கு ஏந்தும்
காவி நன் மேனிக் கமலக் கண்ணன்
என் கண்ணின் உளானே'

[1–9–8]

சேயன் அணியன் எவர்க்கும்
சிந்தைக்கும் கோசரம் அல்லன்
தூயன் துயக்கன் மயக்கன்
என்னுடைத் தோள் இணையானே

1–9–6

வைகுந்தா...
உன்னை நான் பிடித்தேன்
கொள்சிக்கெனவே

2–6–1

இந்த மகிழ்ச்சியெல்லாம் மறைந்துவிடுகிறது. தோன்றிய வேகத்திலேயே காட்சி மறைந்து விடுவதால் எங்கும் இருள் சூழ்கிறது. முன்னிலும் அதிகமாகவும், தாங்க முடியாததாகவும் காண்கிறது இந்தத் துயரம். மும்முரமான தேடல் மீண்டும் தொடங்கப்படுகிறது. முன்னிலும் அதிக ஆர்வமாயும் தீவிரமாகவும் தேடுகிறார். கடவுள் மீது காதல் இப்போது ஒரு வேதனையாகிறது. சொற்கள் தடுமாறுகின்றன. பொருள் கடந்த ஒரு பொருளை தேடும் சொற்கள்.

'பாவியேன் தன்னை அடுகின்ற கமலக்
கண்ணதோர் பவள வாய்மணியே,
ஆவியே அமுதே! அலைகடல் கடைந்த அப்பனே
காணுமாறு அருளாய்!

8–1–1

காணுமாறு அருளாய்
என்றென்றே கலங்கிக்
கண்ண நீர் அலமர வினையேன்
பேணுமாறு எல்லாம் பேணிநின்பெயரே
பிதற்றுமாறு அருள் எனக்கு அந்தோ...
காணுமாறு அருளாய்
பெரிய தண் புனல் சூழ் பெருநிலம் எடுத்த பேராளா!

8–1–2

ஆருயிரேயோ அகலிடம் முழுதும்
படைத்து இடந்து உண்டு உமிழ்ந்து அளந்த
பேருயிரோயோ....
எங்கு வந்துறுகோ?

8–1–5

எங்கு வந்து உறுகோ என்னை ஆள்வானே
ஏழு உலகங்களும் நீயே
அங்கு அவர்க்கு அழைத்த தெய்வமும் நீயே
அவற்றவை கருமமும் நீயே
பொங்கிய புறம்பால் பொருள் உளவேலும்
அவையுமோ நீ யின்னே யானால்
மங்கிய அருவாம் நேர்ப்பமும் நீயே
வான் புலன் இறந்ததும் நீயே.

8–1–6

வணங்குமாறு அறியேன்
மனமும் வாசகமும் செய்கையும்
யானும் நீதானே

8–1–8

யானும் நீதானே யாவதோ மெய்யே
அரு நரகு அவையும் நீயானால்
வான் உயர் இன்பம் எய்தில் என்? மற்றை
நரகமே எய்தில் என்? எனிலும்
யானும் நீ தானாய்த் தெளிதொறும் நன்றும்
அஞ்சுவன் நரகம் நான் அடைதல்
வானுயர் இன்பம் மன்னி வீற்றிருந்தாய்
அருளு நின் தாள்களை எனக்கே.

8–1–9

எண்ணங்களும் உணர்ச்சிகளும் தீவிரமாய்க் கலந்து சொல்லுக்கு அப்பாற்பட்டதைச் சொல்ல முயல்கின்றன.

இடையில்லை யான் வளர்த்த கிளிகாள்
பூவைகாள் குயில்காள், மயில்காள்
உடைய நம் மாமையும் சங்கும் நெஞ்சும்
ஒன்றும் ஒழிய வொட்டாது கொண்டான்
அடையும் வைகுந்தமும் பாற்கடலும்
அஞ்சன வெற்பும் அவை நணிய
கடையறப் பாசங்கள் விட்ட பின்னை
அன்றி அவன் அவை காண்கொடானே.

8–2–8

ஊதும் அத் தீங்குழற்கே உய்யேன் நான்
அது மொழிந்து இடைஇடைத் தன் செய்கோலத்
தூது செய் கண்கள்
கொண்டு ஒன்று பேசித்
தூமொழி இசைகள் கொண்டு ஒன்று நோக்கி
பேதுறும் முகம் செய்து நொந்து நொந்து
பேதை நெஞ்சு அறவறப் பாடும் பாட்டை
யாதும் ஒன்று அறிகிலம் அம்ம! அம்ம!
மாலையும் வந்தது, மாயன் வாரான்! 9–9–9

ஆழ்வார் கூறுகிறார்: வாராயே என்முன் தோன்றாயே! படிசேர் மகரக் குழைகளும் பவள வாயும் நால் தோளும் துடிநேர் இடையும் அமைந்தது ஓர் தூ நீர் முகில் போல் தோன்றாயே?

8–5–3

இந்த நிலைக்கு அடுத்தது மெய்நிலையை அடைய ஒரேபடிதான். நமமாழ்வார் திருவாழ்மொழி இதனை இறுதிப் பத்தில் கடைசிப் பத்துப் பாடல்களில் விளக்குகிறார். தான் அந்த இறுதிப் படியைத் தொட்ட அனுபவத்தை விளக்குகிறார். இறுதிப் பாடலுக்கும் முன்னதாக இந்தத் திருவாய்மொழியில் கடவுளின் மெய்அடியார்கள் இறுதி இல்லத்தைச் சேரும் வகையை உரைக்கின்றார்.

சூழ்விசும்பு அணி முகில் தூரியம் முழக்கின
ஆழ்கடல் அலைதிரை கைஎடுத்து ஆடின
ஏழ்பொழிலும் வளம் ஏந்திய என்னப்பன்
வாழ் புகழ் நாரணன் தமரைக் கண்டு உகந்தே.

10–9–1

ஆம். அடியார்கள் அடைய வேண்டிய இலக்கை சேர்ந்ததாயிற்று. திருவாய்மொழியின் இறுதிப் பாசுரப்படி நம்மாழ்வாரும் அத்திருக்கூட்டத்தில் உள்ளார். ஆனல் அந்த அனுபவத்தை

வெளியிடச் சொற்கள் ஏது? பிடிக்கமுடியாத தொன்றைச் சொல்லிலே பிடிக்க அவை திணறுன்றன.
நிறைவு?

சூழ்ந்து அகன்று ஆழ்ந்து உயர்ந்த முடிவில் பெரும்பாழேயோ?
சூழ்நது அதனில் பெரிய பர நன் மலர்ச்சோதியோ
சூழ்ந்து அதனில் பெரிய சுடர் ஞான இன்பமேயோ
சூழ்ந்து அதனில் பெரிய என் அவா அறச் சூழ்ந்தாயே.

10–10–10

இதுவே யாத்திரையின் முடிவும் ஆகிறது.

# 8

## நம்மாழ்வாரின் தத்துவம்

ஒரு தத்துவ வித்தகரைப் போல நம்மாழ்வார் மெய்ப் பொருளை அணுகவில்லை. அவரது அணுகுமுறை ஒரு சித்தரைப் போன்றது., ஒரு கவிஞரைப் போன்றது. அவரது அரிய செயல்களைக் கவனித்தாலும் தெரியும் அக் கவிதைகள் ஓர் வரையறையான தத்துவ ஒழுங்குட்பட்டு வலிய அமைந்தவையாக இரா. மாறாக, அவற்றிலே ஒரு அவசரம், வெறித்தனமான, சுரவேகத் தேடலும் சொற்களால் வெளியிட முடியாத ஒரு தடுமாற்றமும், சிந்தனையை மங்கச் செய்யும் உணர்ச்சியும் காணலாம். இவை யாவுமே கடவுள் பக்தியை வெளிப்படுத்தும் வேகங்களே. தத்துவ ஞானிக்கோ இவையெல்லாம் தடைகளே. தெளிவு, சூட்சுமக் கற்பனை, ஒழுங்கு, வரட்டு லட்சியம் ஆகியவை மட்டும் இருந்தால் போதும் தத்துவ ஞானிக்கு!

ஆயினும் இந்தக் கவிதைகளிலிருந்தும் அவை வெளியிடும் அனுபவங்களிலிருந்தும் ஒப்பற்ற ஒரு தத்துவ தரிசனம் வெளிப்படுகிறது. இங்குமங்கும் இந்தத் தத்துவ தரிசனம் துளித் துளியாக வெளிப்பட்டாலும் அவற்றைத் திரட்டி ஒருங்கிணைந்து முழுமையாக்கிப் பிரிக்கலாம். இந்தத் தத்துவ தரிசனமே வைணவப் பெரும் ஞான யோகியாகிய ஸ்ரீராமானுஜரைக் கவர்ந்ததாம்; அவரை வேதாந்த சூத்திரங்களுக்கும் கீதைக்கும் உரை எழுதத் தூண்டியதும் இதுவேயாம்.

வேத உபநிடத நூல்களிலிருந்து நேரே நம்மாழ்வார் ஏற்ற தத்துவக் கொள்கை எவ்வளவு என்பதைத் துல்லியமாக ஊகிக்க முடியாது. வைணவப் பேருரையாசிரியர்களான நம்பிள்ளை, பெரியவாச்சான் பிள்ளை இருவரும் நம்மாழ்வாரின் வாக்கிற்கு இணையான வேத உபநிடத இதிகாச புராணப் பகுதிகளை நிறைய எடுத்துக்காட்டியுள்ளனர். நம்மாழ்வாரைப் பற்றிய கர்ணபரம்பரை வரலாற்றுப்படி அவர் பிறவியிலிருந்தே பல்லாண்டுக்காலம் வெளி

உலகப் தொடர்பு ஒன்றும் கொண்டிருக்கவில்லை. மேலும் அவர் பிறந்த சமூகப் பிரிவும் அந்த நாளில் வேதத்தை மூலத்திலேயே தெரிந்து கொள்ளும் வாய்ப்புக் கொண்டிருக்கவில்லை. பிறந்தது முதல் தமது பதினாறு வயது வரை மௌனமாக இருந்துவிட்டு, மதுரகவி ஆழ்வாரின் வினாவுக்கு விடை அளிக்கும் முறையில் திருவாய் மொழிந்தருளிய தருணத்தில் அவருக்கு வேதம் உபநிடதம் பற்றி நேர்முக ஞானம் இருந்திருக்க முடியாது. எனவே நம்மாழ்வாரின் வாக்குக்கும் சமஸ்கிருத வேத உபநிடதங்களுக்கும் ஒருமைப்பாடு காண்பதற்கு ஒரு காரணம் இதுவாக இருக்கலாம். இரண்டுமே அனுபவ வெளிப்பாடுகள். வேத உபநிடதங்களில் ஒரு பகுதியாவது மெய்ப் பொருள் தேடும் நாட்டத்தின் தத்துவ அனுபவ வெளிப்பாடுகள் ஆகும்.[1] மற்றும் ஒன்று. நம்மாழ்வார் வாழ்ந்த நாளிலே ஹிந்துமத மறுமலர்ச்சிக் காலத்திலே வேத—உபநிடதங்களின் பல கருத்துக்கள் எல்லாரும் அறிந்த பரவலான விஷயங்களாக இருந்திருக்கலாம். இக்கருத்துக்களை உள் அடக்கிய புராண இதிகாசங்கள் நடைமுறை வாழ்வின் பகுதியாக இருந்திருக்கலாம். மேலும், நம்மாழ்வார் காலத்துக்குப் பல காலம் முன்னமேயே தமிழரிடையே நாராயணன் என்னும் திருமால் வழிபடு தெய்வமாக விளங்கிவந்தார். தமிழிலே மிகத் தொன்மையான சங்க இலக்கியத்திலே இதற்கு ஆதாரம் உள்ளது.

நம்மாழ்வார் கருத்துப்படி கடவுளே பரம் பொருள், மெய்ப் பொருள். அவரது எண்ணம் முழுதும் பக்தி மயமானது. உலகமும் தனி மனித உயிரும் கூட மெய்யான பொருள்களே, மாயையில்லை. ஆயினும் அவை யாவும் இறைவன் இன்றேல் தனித்து விளங்க முடியாதவை; இறைவனுள் ஒன்றியவை; இறைவனும் அவற்றின் உள்ளே இருப்பவன். அவை யாவும் மெய்ப் பொருளின் அம்சங்கள். எனவே மெய்ப்பொருள் என்பது ஒன்றே.

'திரிபுரம் எரித்த சிவன் இவனுக்கு வலப்புறத்தான். படைக்கும் கடவுளைப் படைத்தவனும் இவனே. தான் வாழ்ந்த உலகங்களில் எல்லாம் விளங்குகிறான். இவனை எப்படி அறிவது? எங்கும் கடந்து எல்லாவற்றுள்ளும் உள்ளானே' என்று வியக்கிறார்.

---

[1] 'எல்லாவற்றிலும் இறைவன் உள்ளான்' — 'ஈசா வாஸ்யம் இதம்ஸர்வம்' என்னும் உபநிடத தொடக்க வாக்கியம் படிப்படியாக எழும் தர்க்க வசனமன்று. அவ்வாறே, தைத்திரிய உபநிடதத்திலும் 'ஸ்ரீமந் நாராயணனே உயர்ந்தவன்' என்று கூறும் வாக்கும் விளக்கம் தராமல் அறுதியிட்டு உரைக்கும் வாக்கேயாம்.

வலத்தனன் திரிபுரம் எரித்தவன்
இடம்பெறத் துந்தித் தலத்து
எழு. திசைமுகன் படைத்த நல் உலகமும்
தானும் புலப்படப் பின்னும்
தன்னுலகத்தில் அகத்தனன் தானே
சொலப்புகில் இவை பின்னும் வயிற்றுள
இவை அவன் துயக்கே

[1–3–9]

எனவே வேறு சில யோகிகளுக்கு இருந்தது போல இந்த மண்ணுலகம் நம்மாழ்வாரைப் பொறுத்தவரை வெறும் மாயை இல்லை. மாறிமாறிவரும் இயல்பு கொண்டதேயாயினும் அது ஓயாமல் தன்னைப் புதுப்பித்துக் கொண்டே இருக்கிறது. இறைவன் திருவுள்ளத்தின்படி — வளர்ச்சியும் தேய்வும் மறுமலர்ச்சியும், பிறப்பும் இறப்பும் என்று எண்ணற்ற சூழல்களாக. அதன் படைப்பு வித்தே மெய்ப்பொருள் ஆதலால் அது மெய்யாக அன்றி வேறு எப்படி இருக்க முடியும்? அவன் அருளாலே அது நிலவுகிறது; அவனே அதனைப் போதிக்கிறான். ஊழிப் பிரளயத்தின்போது அது அவனையே சார்கிறது. மறுபடி புதுப்பிக்கப் பெறுவதற்காக. அழிவு என்பது பூரணமல்ல. உலகம் புதுப் பிறவி எடுக்கிறது. எனவே அவன் திருவருளாலே, விருப்பத்தாலே மற்றுமோர் காலச் சக்கரம் உருவாகிப் பரவுகிறது.

புரம் ஒரு மூன்று எரித்து
அமரர்க்கும் அறிவியந்து
அரன் அயன் என உலகு
அழித்து அமைத்து உளனே

[1–1–8]

கடல் ஞாலம் செய்தேனும் யானே என்னும்
கடல் ஞாலம் ஆவேனும் யானே என்னும்
கடல் ஞாலம் கொண்டேனும் யானே என்னும்
கடல் ஞாலம் கீண்டேனும் யானே என்னும்
கடல் ஞாலம் உண்டேனும் யானே என்னும்
கடல் ஞாலத்து ஈசன் வந்தேறக் கொலோ?

[5–6–1]

'கடல் ஞாலம் ஆவேனும் நான்' என்ற வாசகம் குறிப்பிடத்தக்கது. அவனால் படைக்கப் பெற்றும், காக்கப் பெற்றும் அழிக்கப் பெற்றும்

கரைந்து மீண்டும் புதுமையாக்கப் பெற்றும் அவனது எல்லையில்லா லீலை என்னும் விளையாட்டில் நாம் காணும் இந்தப் பிரபஞ்சம் எப்போதும் மாறியபடி மறைந்தபடி பலவகையிலும் மறுபிறப்பு எடுத்தபடி இருந்தும் அது ஆண்டவனின் வடிவமே, திரு உடலேயாகும். அவனது விசுவஸ்வரூபமே, எல்லையற்ற வடிவேயாம். அதன் ஒவ்வொரு பகுதியிலும், பெரியதோ சிறியதோ, மிகச் சிறு நுணுக்கிடமோ, துளிச் சொட்டு நீரோ காட்டு வழி மலரோ, மிகச் சிறந்த விண்மீனோ எல்லாவற்றிலும் அவன் அந்தர்யாமியாக உள் விளங்குகிறான்:

பரந்ததண் பரவையுள் நீர்தொறும் பரந்துளன் [1–1–10]
பூவையும் காயாவும் நீலமும் பூக்கின்ற
காவி மலர் என்னும்...
எல்லாம் பிரான் உருவே [பெ. திருவந்தாதி – 73]
மாதூணாச் சுடர் உடம்பாய் [3–1–8]

எங்கும் எதுவும் அவன் உறைவிடமே, நாம் காண முடிந்தால் காணலாம்.

திட விசும்பு எரிவளி நீர் நிலம்
இவை மிசைப்
படர் பொருள் முழுவதுமாய்
அவை அவை தொறும்
உடல் மிசை உயிர் எனக்
கரந்து எங்கும் பரந்துளன்
சுடர் மிகு சுருதியுள்
இவை உண்ட சுரனே

[1–1–7]

வேதங்களின் முழுப் பொருளான ஈசன் எங்கும் ஒளிந்துள்ளான், எல்லா உலகும் அவன் பால் உள.

எங்கும் உளன் என்றால் மானிடனின் நெஞ்சிலேயும் கோவில் கொண்டிருக்க வேண்டும் என்று ஆகிறதே. மனிதனின் ஆன்மாவின் ஆழத்தில் எங்கோ ஓர் ஓரத்தில் இருக்கிறானோ ஈசன்! நம்மாழ்வார் பேசுகிறார்:

'என்னுள் கலந்தவன்' [2–5–3]
மாயவன் என்னுள் இரான் எனில்
பின்னை யான் ஒட்டுவேனோ [1–7–6]

தானொட்டி வந்து என்
தனி நெஞ்சை வஞ்சித்து
ஊன் ஒட்டி நின்று என்
உயிரில் கலந்தியல்வான்

[1–7–7]

அகம் [உள்ளே], புறம் [வெளியே] என்ற பதங்களை நம்மாழ்வார் அங்கங்கே அழுத்தமாக ஆள்கின்றார்.

அளிவரும் அருளினோடு
அகத்தனன் புறத்தனன் அமைந்தே

[1–3–2]

உளன் எனில் உளன் அவன்
உருவம் இவ் உருவுகள்
உளன் அலன் எனில் அவன்
அருவம் இவ்வருவுகள்;
உளன் என இலன் என
இவை குணம் உடைமையில்
உளன் இரு தகைமையொடு
ஒழிவிலன் பரந்தே. [1–1–9]

இந்த எதிர்மறை நிலைகளே குணமாக, எங்கும் பரந்து அதற்கு மேலுமாய் விளங்குகிறான் அவன். பின்னர் ஓர் நிலையில், நம்மாழ்வார், தமது ஆன்ம வேட்கையின் முடிவைத் தொட்டு, பரம் பொருளை உணர்ந்த நேரத்திலே இன்னும் தெளிவாகக் கூறுகிறார்.

வஞ்சக் கள்வன் மாமாயன்
மாயக் கவியாய் வந்து
என் நெஞ்சும் உயிரும் உள் கலந்து
நின்றார் அறியா வண்ணம்
என் நெஞ்சும் உயிரும் அவை உண்டு
தானே ஆகி நிறைந்தானே [10–7–1]

கடவுள் இவ்வாறு மனிதனின் உள்ளும் புறத்தும் விளங்குகிறார். கேட்கும் ஒலிகளிலும் காணும் காட்சிகளிலும் விளங்குகிறார். ஆண்டவனின் ஊழியர்களாக இயற்கை ஆற்றல்கள், கட்டவிழ்த்த இயற்கை ஆற்றல்கள், இறப்பு அற்ற அமரர்கள், அவனது திருவருளை இடையறாது நிறைவேற்றி வருகின்றனர். முக்காலமும் அவனே—நிகழ்ந்த, நிகழும் நிகழப்போகும் எல்லாமுமாம். கால எல்லை கடந்தது அவன் படைப்பு:

சென்று செல்லாதன முன்னிலாம்
காலமே! உன்னை எந்நாள்
கண்டு கொள்வனே [3–8–8]

மற்றுமொரு வேறுபட்ட பொருளிலும் ஆண்டவன் 'உள்ளும் வெளியும் உள்ளவன். எக்கார்டு (Eckhart) என்பவர் கூற்றுப்படி பிரபஞ்சம் அனைத்துள்ளும் கண்ணுக்குத் தெரியாத காட்சியாக ஆண்டவன் விளங்குகிறான், ஒவ்வொரு படைப்பினுள்ளும், அஃறிணைப் பொருளிலும் உயர்திணைப் பொருளிலும், மனிதனுக்கு உள்ளேயும்தான்; அவ்வாறே ஆண்டவன் எல்லாவற்றிற்கும் புறம்பாகவும் விளங்குகிறான் — எல்லாவற்றையும் கடந்து, விரிந்து பரந்து எதனாலும் பாதிக்கப்படாமல். அவனே மெய்ப் பொருள் — காலம் கடந்தவன், எல்லை கடந்தவன், மானிடனின் அறிவுக்கு அப்பாற்பட்டவன், வெறும் சொற்களால் இதை எப்படி விவரிப்பது?

மாயன், என் நெஞ்சிலுள்ளான்
மற்றும் எவர்க்கும் அஃதே
காயமும் சீவனும் தானே.
காலும் எரியும் அவனே.
சேயன் அணியன் அவர்க்கும்
சிந்தைக்கும் கோசரம் அல்லன்.
தூயன் துயக்கன் மயக்கன்
என்னுடைத் தோள் இணையானே.

[1–9–6]

உணர்ந்து உணர்ந்து
இழிந்து அகன்று உயர்ந்து
உரு வியந்த இந்நிலைமை
உணர்ந்து உணர்ந்து உணரிலும்
இறைநிலை உணர்வு அரிது, உயிர்காள் [1–3–6]

மெய்ப்பொருள் ஒன்றேதான் எனினும் நம்மாழ்வார் அதன் இரண்டு அம்சங்களைத் தெளிகிறார் — ஒன்று அதன் நித்திய சொரூபம், மற்றது அதன் மாறுபடும் நிலை. அதே சமயம் ஒரு தனிமனிதன் நோக்கிலே அது மூன்று வடிவாகத் தெரிகிறது — மனிதன், பிரபஞ்சம், ஆண்டவன் என் மூன்று தோற்றமாக. மனித ஆன்மாவுக்குத் தனி இடம் உண்டு போலும்; பிரபஞ்சத்துக்கும் அவ்வாறே. ஆனால் ஆண்டவனோ இவை இரண்டிலும் உள்ளான், இரண்டுமே அவனுக்குள் உள்ளன. மனிதனும் பிரபஞ்சமும் தனித்து நிற்பன அல்ல, அவை ஆண்டவன் உடைமையே. நம்மாழ்வார் இக் கருத்துக்களையெல்லாம் மறை பொருளாகப் பேசுகிறார். மானுட மொழியிலே பேச வல்ல முறையில் மெய்ப் பொருளை எதிர்மறையாக, அளக்க முடியாதது, ஆராய முடியாதது, விவரிக்க வொண்ணாதது. மனிதக் கற்பனைக்கு எட்டாதது.

காலத்தையும் வெளியையும் கடந்தது, அவன் படைத்த தேவர்களாலும் எட்ட முடியாதவன் என்றெல்லாம் பேசுகிறார்.

தனி முதல்வனை ஞாலமுண்டவனை
ஆமோ தரம் அறிய ஒருவர்க்கு?
என்றே தொழும் அவர்கள்
தாமோதரன் உருவாகிய
சிவர்க்கும் திசை முகர்க்கும்
ஆமோ தரம் அறிய ?

[2–7–12]

தானே தனித் தோன்றல்
தன் அளப்பு ஒன்றில்லாதான்
தானே பிறர்கட்கும் தற்தோன்றல்
தானே இளைக்கில் பார்
கீழ் மேலாம் மீண்டு அமைப்பான்
ஆனால் அளக்கிற்பார்
பாரின் மேல் ஆர்!

[பெரிய திருவந்தாதி–24]

உயர்வு அற உயர்நலம் உடையவன்
எவன் அவன்
மயர்வு அற மதிநலம் அருளினன்
எவன் அவன்

[1–1–1]

இலன் அது உடையன் இது என
நினைவு அரியவன்
நிலனிடை விசும்பிடை
உருவினன் அருவினன்
புலனொடு புலனலன் ஒழிவிலன்
பரந்த அந் நலனுடை ஒருவனை
நணுகினம் நாமே.

[1–1–3]

சில இடங்களில் நம்மாழ்வார் எல்லாம் கொண்ட, விவரிக்க இயலாத மெய்ப் பொருளின் இயல்பை மாற்று வாசகங்களிலே தெளிவாக்க முயல்கிறார்.

நல்குரவும் செல்வும்
நரகும் சுவர்க்கமுமாய்
வெல்பகையும் நட்பும்

விடமும் அமுதமுமாய்
பல்வகையும் பரந்த பெருமான்

[6–3–1]

கண்ட இன்பம் துன்பம்
கலக்கங்களும் தேற்றமுமாய்
தண்டமும் தண்மையும் தழலும் நிழலும் ஆய்,
கண்டு கோடதற்கு அரிய பெருமான்

[6–3–2]

புண்ணியம் பாவம் [6–3–4]

கைதவம் செம்மை கருமை வெளுமையுமாய்
மெய் பொய்
இளமை முதுமை
புதுமை பழமையுமாய் [6–3–5]

உகப்பு ஆய் முனிவு ஆய்
புகழாய்ப் பழியாய் [6–3–6]

நிழல் வெய்யில்
சிறுமை பெருமை
குறுமை நெடுமையுமாய்
சுழல்வன நிற்பன மற்றுமாய்
அவை அல்லனுமாய் [6–3–10]

இருந்தும் நம்மாழ்வார் வழிபாட்டுக்கு உகந்த மூர்த்தியினைப் போற்ற விரும்புகிறார். எல்லாம் கடவுள் மயம் என்பதை உணராதவர் இல்லை அவர்; பெர்னார்ட் என்னும் ஞானியின் கூற்றுப்படி 'ஆண்டவனை நல்லோன், உயர்ந்தோன், வரந்தருவோன் என்று போற்றுதல் கூட "அவன் உள்ளான்'' என்ற சொற்களில் அடங்கிவிடும். ஆனால் நம்மாழ்வார் கடவுளை நினைத்து அவனுக்காக ஏங்கியபோது அந்த ஈசுவரன் தனி நாயகன் ஸ்ரீமன் நாராயண் என நினைத்தே தொழுதார். தைத்திரிய உபநிடதம் கூறும் நாராயணனையே நாடினார். அவனுக்குச் சக்கரம் உண்டு, சங்கு உண்டு. மணமிக்க துளசி மாலை உண்டு. பட்டு ஆடையும் பொன் முடியும் உண்டு. கார்மேனித் தாமரைக் கண்கள். அழகே வடிவினன். தமிழர் போற்றும் திருமால் என்னும் நாராயணனைத் தொழுவது பற்றி வேதத்திலும் மிகப் பழம் சங்க இலக்கியத்திலும் காணமுடிகிறது.

நம்மாழ்வார் நாராயணனை முழு முதற் கடவுளாகக் கருதிப் பாடினார். அவரது பாடல்களிலே மறை பொருளாகவும் விரிவாகவும் சூக்குமமாகவும் ஸ்தூலமாகவும் பொதுவாகவும் தனியன்பு காட்டுவதாகவும் பல இடங்கள் உள்ளன:

பொன்முடி அம்போர் ஏற்றை,
எம்மானை, நால் தடந்தோள்
தன் முடிவு ஒன்று இல்லாத
தண் துழாய் மாலையனை [2–5–8]
என் கரு மாணிக்கச் சுடரை [2–5–9]

இவ்வாறு தொடங்கி, மேலும் பேசுகிறார் ;

ஆண் அல்லன் பெண் அல்லன்
அல்லா அலியும் அல்லன்
காணவும் ஆகான்
உளன் அல்லன் இல்லையல்லன்
பேணும்கால் பேணும் உருவாகும்
அல்லனும் ஆம் [2–5–10]

இவ்வாறு நம்மாழ்வார் பாடி வழிபடும் நாராயணன் என்றும் ஆண்டவனைக் குறிப்பிடும்போது இங்கும் அங்கும் உருவத் தோற்றம் எல்லையில்லா சுருபத்தில் கரைந்துவிடுகிறது:

முடிச் சோதியாய் உனது முகச் சோதி மலர்ந்ததுவோ?
அடிச் சோதி நீ நின்ற தாமரையாய் அலர்ந்ததுவோ?
படிச் சோதி ஆடையொடும் பல்கலனாய் நின் பைம்பொன்
கடிச் சோதி கலந்ததுவோ திருமாலே?

[3–1–1]

இதுவரை ஸ்தூலமாக இருப்பது இனி சூட்சுமமாகிறது :

மாசுணாச் சுடர் உடம்பாய் மலராது குவியாது
மாசுணா ஞானமாய் முழுதுமாய் முழுது இயன்றாய்! [3–1–8]

சர்வேசுவரன் எதிலும் பரந்துளன் [அந்தர்யாமி] என்பதால் உலகிலுள்ள எல்லாவற்றுடனும் தொடர்பு கொண்டவன்; மேலும் பலமுறை அவதார வடிவங்களும் எடுத்து உடலும், வெளியும் காலமும் கட்டுப்படுத்தும் நெறிகளுக்குள் அடங்கிக் கிடந்தவன். பிறப்பும் இறப்பும் கொண்ட இந்த உலகில் தோன்றியதே அவனது அவதாரமாகும். மண்ணுலகுக்கு தானே கீழ் இறங்கிவருவது மானுடன் மீது அவனுக்கு இருக்கும் அளவற்ற பெரும் கருணையையே காட்டுகிறது. இதற்காக, பகவத்கீதை சொல்வது போல, நம்மாழ்வார் ஒப்புக் கொள்வதுபோல, மறங்கள் மாய்த்து அறங்கள் செழிக்கவே அவன் அவதாரம் எடுக்கிறான்.

சாது சனத்தை நலியும்
கஞ்சனைச் சாதிப்பதற்கு
ஆதி அம் சோதி உருவை
அங்குவைத்து இங்குப் பிறந்த
வேத முதல்வன் [3–5–5]

துயர் இல் சுடர் ஒளி தன்னுடைச் சோதி
நின்ற வண்ணம் நிற்கவே
துயரில் மலியும் மனிசர் பிறவியல்
தோன்றி கண் காண வந்து
துயரங்கள் செய்து
தன் தெய்வ நிலை உலகில் புக
உய்க்கும் அம்மான் [3-10-6]

இந்த அவதாரங்கள் உலகின் உயிரினத் தோற்றத்தையும் பரிணாம வளர்ச்சியையும் காட்டும் குறியீடுகள் என்று சில நூலோர் கருதுகின்றனர். ஆனந்த கே. குமாரசாமி, ஹக்ஸ்லி போன்ற அறிஞர்கள் கருத்துப்படி இந்த அவதார வரிசை என்னும் தத்துவம் மனவியல் தத்துவ இயல் ஆகியவற்றில் நிலையான உண்மைகளைக் காட்டும் வெளிப்பாடுகள் என்கின்றனர். "வைணவ மறைநூல்களில் கண்ணபிரானைப் பற்றி வரும் இடங்கள் அவனது வாழ்க்கை வரலாறு ஆகாது. அவை மனித மனத்தகத்து என்றும் மெல்ல மலரும் நிலைகளையே காட்டுவன" என்கிறார் ஆனந்த கே. குமாரசாமி, ஆல்டஸ் ஹக்ஸ்லி 'என்றும் வற்றாத தத்துவம்' [பெரினியல் பிலாஸபி] என்ற நூலில் கூறுகிறார்;

"கண்ணனின் திருவிளையாடல்கள் ஒருவகைக் குறியீடுகள். மனஇயல் மற்றும் தத்துவ இயல் வெளிப்படுத்தும் நித்திய தத்துவங்களின் குறியீடுகளே. கடவுள் உறவு என்னும்போது ஆன்மா கொள்வது தனித்த உறவாக, பெண்மை உறவாக, அடங்கிப் போகும் உறவாகவே அமையும்."

நம்மாழ்வாரைப் பொறுத்தவரை அவதாரங்கள் யாவும் வரலாற்று உண்மைகளே. அதோடு அவற்றிலே திரும்பத் திரும்பத் தத்துவ தரிசனமும் காண முடிகிறது. தமது பாடல்களிலே அவதார நிகழ்ச்சிகளைப் பற்றி எத்தனையோ இடங்களில் குறிப்பிடுகிறார்; அவை நிகழ்ந்த காலங்களிலே தாமும் வாழ்ந்திருக்கவில்லையே என்ற வருத்தத்தையும் சற்றே வெளிப்படுத்துகிறார். இன்று ஊனக் கண்ணால் காண முடியாதவன் ஆயினும் ஆண்டவனின் அந்த அவதார நிகழ்ச்சிகள் மனத்தினால் உணரப்படுவனவே. இரண்டு நிலைகளில் அவதாரங்கள் ஆழ்வாருக்கு உண்மைத் தோற்றங்கள்: ஏதோ ஒரு கால கட்டத்தில் அவை நிகழ்ந்தன என்பது ஒரு நிலை. என்றென்றும் மனித ஆன்மாவுக்குள் அவதரித்து வெளிப்பட்டுக்

கொண்டிருப்பது என்பது மற்றொரு நிலை. அவதார லீலைகளின் விவரங்களில் ஆழ்வார் லயித்துப் போய்விடுகிறார். அதுவும் அவனது அருள் எழில் வெளிப்படும் நிகழ்ச்சிகளிலே. கோகுலத்தில் விளையாடும் குழந்தைக் கண்ணனின் அழகிலே; ஓரடியால் விண்ணையும், ஓரடியால் மண்ணையும் அளந்த திருவிக்கிரமன் பேருருவிலே இரணியன் எனும் அசுரனை அழிக்க எடுத்த பயங்கர நரசிம்ம ருபத்தை எல்லாம் நுட்பமாக வருணிக்கிறார். இறைவனின் அவதாரத்திலே ஆழ்வார் காணும் சிறப்பு இதுவே; மேன்மையான எல்லாவற்றுக்கும் மேலான ஒருவன் தாழ்ந்து தாழ்ந்தவற்றுக்கும் கீழானவற்றுக்கும் எட்ட, கீழிறங்கி வரும் நீர்மைதான் என்னே! எளிய மானுடனின் துயரங்களையும் துன்பச் சுமைகளையும் ஏற்கும் பரிவுதான் என்னே! — உலகங்களுக்கெல்லாம் நாயகன் எளிய ஆயர்களுடன் காட்டில் திரிந்து, வெண்ணெய் திருடியதற்காக உரலிலே கட்டுண்டு கிடக்கிறான்!

'மத்துறு கடை வெண்ணெய்
களவினில் உரல் இடை யாப்புண்டு
எத்திறம் உரலினோடு
இணைந்திருந்து
ஏங்கிய எளிவே!

[1–3–1]

*இந்த அனுபவம் நம்மாழ்வாரின் கவிதை மீது பதிந்த தன்மை* பற்றி இந்த நூலிலே பிறிதோரிடத்தில் குறிப்பு உண்டு.

நம்மாழ்வார் பாசுரங்களில் பாடும் திருத்தலங்கள் அநேகமாக எல்லாமுமே தென்னிந்தியாவில் உள்ளவை; சில கேரளத்தில் உள்ளன. இந்த ஊர்களுக்கெல்லாம் அவர் சென்றிருப்பாரா? என்று வியப்பு ஏற்படுகிறது. கர்ண பரம்பரை வரலாற்றுப்படி திருநகரி [குருகூர்] கிராமத்துப் புளிய மரத்தை விட்டு அவர் என்றும் அகன்றதே இல்லை; பல திவ்ய தேசத்து எம்பெருமான்களும் நேரிலே வந்து ஆழ்வாருக்குச் சேவை சாதித்தார்கள்! இது எப்படியாயினும் நம்மாழ்வார் எந்தத் தலத்தைப் பற்றிப் பாடினாலும் அங்குள்ள இயற்கை அழகையும் விவரித்தே பாடுகிறார். அவை யாவும் ஆழ்வாருக்கு ஆண்டவனின் திருமேனியாகவே தோற்றமளிப்பவை யாகின்றன. *தாமரவருணை ஆற்றங்கரையிலே* திருப்புளிங்குடியைப் பற்றி ஆழ்வார்,

"தென்திரைப் பொருநல் தண்பணை சூழ்ந்த
திருப்புளிங்குடிக் கிடந்தானே' [9–2–1]

என்கிறார்.

நம்மாழ்வார் நோக்கிலே ஒவ்வொரு தலமும் வாழும் கடவுளின் இருப்பிடமாகும். வேங்கடம் பற்றிக் கூறும்போது சொல்கிறார்;

தண்வேங்கடம் மேகின்றாய்
தண்துழாய் விரை நாறு
கண்ணியனே

[2–6–10]

கடவுளை உணர்வதற்குத் தாம் படும் வேதனையை உருக்கமாகக் கூறும் நம்மாழ்வார் முடிவாகச் சொல்வது இதுவே; முயற்சிகள் மட்டும் போதா; பூரணமாகச் சரணமடைவதே அவனை அடையும் வழியாகும்;

நிகரில் புகழாய்!
உலகம் மூன்றுடையாய்!
என்னை ஆள்வானே!
நிகரில் அமரர் முனிக் கணங்கள்
விரும்பும் திருவேங்கடத்தானே!
புகல் ஒன்று இல்லா அடியேன்
உன் அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே

6–10–10

அடைக்கலம் கிடைப்பது நம் முயற்சியினாலோ, நாம் அதற்குத் தகுதியானவர் என்பதாலோ அல்ல. ஆண்டவனின் எல்லையற்ற கருணையினாலேதான் என்கிறார் நம்மாழ்வார். நம்மை அக் கருணைக்குப் பாத்திரராக விடுவதே பக்தி செய்வதாகும். இந்தப் பக்தியன்பு வளர்ந்து, பெருகி மற்று எதற்கும் இடம் இராது பெருக்கெடுக்கும்போது, நம்மாழ்வார் அனுபவப்படி இதுவே ஆண்டவன் வழங்கும் வைகுந்த சுவர்க்கத்தைவிடச் சிறப்பானதாகுமாம். ஆண்டவனைப் பார்த்துப் பேசுகிறார் இப்படி.

ஒன்று உண்டு செங்கண் மால்! யான் உரைப்பது;
உன் அடியார்க்கு 'என் செய்வன்' என்றே இருத்தி நீ
நின் புகழில் வைகும் தம் சிந்தையிலும் மற்று இனிதோ
நீ அவர்க்கு வைகுந்தம் என்று அருளும் வான்?

[பெரிய திருவந்தாதி 53]

நம்மாழ்வாக்கு இறைவன் மீதுள்ள பக்தியும் அவனிடம் சரண் அடைதலும் மெய்ப்பொருள் என்னும் இருப்பிடத்திற்கு இட்டுச் செல்லும் பாதையேயாம்:

நாளும் நின்று அடு நம பழமை
அம்கொடுவினையுடனே
மாளும் ஓர் குறைவில்லை
மனனகம் மலம் அறக் கழுவி
நாளும் நம் திரு உடை அடிகள் தம்
நலம் கழல் வணங்கி
மாளும் ஓர் இடத்திலும்
வணக்கொடு மாள்வது வலமே.

1–3–8

மெய்யோ_முழு அன்பாய் விளங்குகிறது. இவ்வுலகில் எங்கும் நம்மைச் சூழ விளங்குகிறது. அவதார வடிவிலே வருகிறது; நமது சிறு மானுட வடிவிலே தொழும்போது நம் அருகே வந்து தொட்டு நிற்கிறது. மற்றவர்களால் அளக்க முடியாதவனும் அடைய முடியாதவனும் ஆனாலும் அவன்மீது பற்று வைத்தவர்களுக்கு அடைதற்கு எளியவன்!" [பத்துடை அடியவர்க்கு எளியவன், பிறர்களுக்கு அரிய வித்தகன். 1–3–1].

நம்மாழ்வாரின் தத்துவம், ஆன்மாவின் அல்லல்களையும் தீராத ஐயங்களையும் பற்றி அவர் பாடி இருப்பினும், கடவுள் ஒருவர் உண்டு என்னும் உறுதியான கருத்தையும் நம்பிக்கையையும் வெளிப்படுத்தும் தத்துவமேயாகும். மனிதனுக்கு உய்வு உண்டு, அவன் சற்று முயற்சி எடுத்தால் இறைவனின் பேரருள் இவனிடம் மாறாத ஆறுதலும் ஒளியும் அன்பும் சேர்க்கும்:

பொலிக பொலிக பொலிக
போயிற்று வல்லுயிர்ச் சாபம்.
நலியும் நரகமும் நைந்த
நமனுக்கு இங்கு யாதொன்றும் இல்லை.
கலியும் கெடும் கண்டு கொள்மின்
கடல் வண்ணன் பூதங்கள் மண்மேல்
மலியப் புகுந்து இசை பாடி
ஆடி உழிதரக் கண்டோம். [5–2–1]

நமது கடவுளர்களைப் பற்றி நம்மாழ்வார் காட்டும் கருத்து குறிப்பிடத்தக்கது. இதனை விதவிதமாக வெளியிடுகிறார். ஆனால் ஸ்ரீ நாராயணனே பரம்பொருள் என்பதைத் தயக்கமின்றித் தெளிவாக்குகிறார். பிற கடவுளர்கள் அவனது படைப்பே, அவனைத் தொழுபவர்களே, அவர்கள் தெய்வங்களே ஆயினும் நாராயணனைப் பூர்ணமாகத் தெரிந்தவர் ஆகார் என்கிறார்:

'வெள்ஏறன் நான்முகன் இந்திரன்
வானவர் புள்ஊர்தி கழல்
பணிந்து ஏத்துவரே [2-2-10]

சிவற்கும் திசை முகற்கும்
ஆமோ தரம் அறிய எம்மானை? [2-7-12]

பேசநின்ற சிவனுக்கும்
பிரமன் தனக்கும் பிறர்க்கும்
நாயகன் அவனே [4-10-4]

பிரம்மனின் ஒரு சிரத்தைத் துண்டித்த கொடிய பாவத்திலிருந்து சிவனைக் காத்த புராண வரலாற்றை நம்மாழ்வார் எடுத்தாள்கிறார்.

மாபாவம்விட அரற்குப்
பிச்சை பெய் கோபால கோளரி ஏறு [2-2-2]
அயன் சென்னி என்னும்
முடைக்கலத்து ஊண்முன்
அரனுக்கு நீக்கியை [திருவிருத்தம் 86]

மூல புருஷனான ஸ்ரீநாராயணன் உலகைக் காத்தருள இருக்கும்போது இந்தக் குருட்டு உலகம் ஏனோ பிற தெய்வங்களின் பின்னே செல்கிறது என்று நம்மாழ்வார் வியப்புடன் பேசுகிறார்.

ஆதிப் பிரான் நிற்க
மற்றத் தெய்வம் நாடுதிரே? [4-10-1]

உலகோரை விளிக்கிறார், அவர்கள் எல்லாரும் தொழும் கடவுளர்களை எல்லாம் படைத்தவனே ஸ்ரீ நாராயணன் என்று தெளிவாக்குகிறார்:

நாடிநீர் வணங்கும் தெய்வமும்
உம்மையும் முன் படைத்தான்
வீடு இல் சீர்ப்புகழ் ஆதிப்பிரான் [4-10-2]

லிங்க வழிபாடு செய்யும் சைவர்களையும் பௌத்த ஜைனர்களையும் திரும்பத் திரும்ப ஓயாது அதுபற்றி வாது செய்வோரையும் விளித்து, அவர்கள் கடவுள் என எவரைக் கருதினாலும், கடவுள் என்பது ஸ்ரீநாராயணனே ஆகும் என்று அழுத்தமாகக் கூறுகிறார்.

இலிங்கத்திட்ட புராணத் தீரும்
சமணரும் சாக்கியரும்
வலிந்து வாது செய்வீர்களும்
மற்று நும் தெய்வமும் ஆகி நின்றான். [4-10-5]

ஆயினும் நம்மாழ்வார் மக்களை விஷ்ணு பிரம்மன் சிவன் என்றும் திருமூர்த்தியை வழிபடும்படி அழைக்கிறார். வழிபட்டு வழிபட்டு அவர்களைப் பற்றி மேலும் மேலும் தெளிய அறிய வேண்டுகிறார்.

உணர்ந்து உணர்ந்து உரைத்து உரைத்து
அரி அயன் அரன் என்னும் இவரை
உணர்ந்து உணர்ந்து உரைத்து உரைத்து
இறைஞ்சுமின் மனப்பட்டதொன்றே [1-3-6]

எல்லாத் தெய்வமும் ஸ்ரீ நாராயணனின் எத்தனையோ திருவடிவுகளே என்கிறார்.

இறுக்கும் இறை இறுத்து உண்ண
எவ் உலகுக்கும் தன் மூர்த்தி
நிறுத்தினான் தெய்வங்களாக
அத் தெய்வ நாயகன் தானே [5-2-8]

ஒளி மணி வண்ணன் என்கோ
ஒருவன் என்று ஏத்தநின்ற
களிர் மதிச் சடையன் என்கோ
நான்முகக் கடவுள் என்கோ! [3-4-8]

நம்மாழ்வார் கண்ட பரம் பொருள் அவரது தரிசனத்தில் விஷ்ணுவாய், சிவனாய், பிரம்மனாய்த் திருமூர்த்தியாகத் தெரிகிறது. சிவன் பிரம்மன் இந்திரன் என்றுள்ள தேவர்கள் எல்லாம் தொழுமின் அவை யாவும் நாராயணனின் வடிவங்களே. இத் தெய்வங்களைத் தொழுது கலியை வெல்லுவோம்: என்கிறார்.

மிக்க உலகுகள் தோறும்
மேவிக் கண்ணன் திருமூர்த்தி
நக்க பிரானோடு அயனும்
இந்திரனும் முதலாக
தொக்க அமரர் குழாங்கள்
எங்கும் பரந்தன தொண்டீர்
ஒக்கத் தொழுகிற்றீர் ஆகில்
கலியுகம் ஒன்றும் இல்லையே 5-2-10

நம்மாழ்வாரின் நோக்கிலே நாராயணன் திருவுருவ மேனியிலே சிவனையும் பிரம்மனையும் திருமகளையும் தரிசிக்கிறார்: [ஏறு

ஆளும் இறையோனும் திசைமுகனும் திருமகளும் கூறு ஆளும் தனி உடம்பன் [4—8—1] மேலும் 'முக்கண்ணப்பா! என்று ஸ்ரீ நாராயணனையே விளிக்கிறார். முக்கண்ணன் என்பது சிவனல்லவோ!

இவ்வாறு ஒன்றுக்கொன்று மாறுபட்டதாகத் தோன்றும் வாசகங்களுக்குப் பொருத்தமாகப் பொருள்காணவும் நாராயணனே ஆதிக்கும் ஆதியானவன் என்று நிருபிக்கவும் சித்தாந்த மரபில் வந்த உரையாசிரியர்கள் தமது அறிவாற்றலையெல்லாம் காட்டியுள்ளார்கள்.

ஸ்ரீ நாராயணனே பரம்பொருள் என்று கூறுவது நம்மாழ்வாரின் தத்துவம் என்பதில் ஐயமில்லை. ஆனால் அவரது நம்பிக்கை கவித்துவ விவரணையில் பரவிய போது அவர் எங்கும் எதனிலும் பிறர் வணங்கும் கடவுளரிடத்தும் கூட ஸ்ரீநாராயணனையே கண்டார்:

அவரவர் தமதமது
அறிவறி வகை வகை
அவரவர் இறையவர்
என அடி அடைவர்கள்
அவரவர் இறையவர் குறைவிலர்;
இறையவர் அவரவர் விதிவழி
அடைய நின்றனரே. 1—1—5

வணங்கும் துறைகள் பலபல ஆக்கி மதிவிகற்பால்
பிணங்கும் சமயம் பலபல ஆக்கி
அவை அவை தோறு அணங்கும் பலபல ஆக்கி
நின் மூர்த்தி பரப்பிவைத்தாய்
இணங்கும் நின் ஒரை இல்லாய்
நின்கண் வேட்கை எழுவிப்பனே திருவிருத்தம் 96

இவரது தொடக்க நூலான திருவிருத்தத்திலேயே நம்மாழ்வார் இப்படிக் கூறுகிறார். முடிவிலே மெய்ப் பொருள் உணர்ந்த நிலையிலே இவரது காட்சியிலே காண்பனவெல்லாம் சூட்சமமானவையின் பிம்பங்களும், அவற்றின் வாயிலாக எட்டாப் பொருளினை எட்டும் முயற்சியாகிறது.

சூழ்ந்து அகன்று ஆழ்ந்து உயர்ந்த
முடிவில் பெரும் பாழேயோ!

சூழ்ந்ததனில் பெரிய
பர நன்மலர் சோதியோ!
சூழ்ந்ததனில் பெரிய
சுடர்ஞான இன்பமேயோ
சூழ்ந்ததனில் பெரிய
என் அவா அறச் சூழ்ந்தாயே

10–10–10

இந்தச் சூழ்ந்த பாழ் எது! அதன் பெயரும் வடிவமும் என்ன?

# 9

# நம்மாழ்வாரின் கவிதை

மெய்ப்பொருளைத் தேடிவருபவரும் தமது தீவிர நம்பிக்கையாலும் உள்ளுணர்வாலுமே மெய்ப் பொருளை உணர்ந்தவருமான நம்மாழ்வாரைப் போன்ற ஒரு ஞானி எப்போது கவிஞர் ஆகின்றார்? இந்தக் கேள்விக்கு விடை காண முயன்றால் கவிதை உலகில், அதன் வண்ண விசித்திரங்களில் ஈடுபட்டு விடுவோம். அதிலிருந்து மீண்டு வந்தாலும் வாக்தேவியின் ஆசி மலர்களின் நறுமணம் சுமந்து வராமல், விமரிசன வாசகங்களையும் வெற்று விளக்க கோஷத்தையுமே சுமந்து வரலாம். எனவே பொதுப்படையான விளக்கங்களைக் கூறாது விட்டு விடுகிறேன். அடியேனது நோக்கம் இங்கே நம்மாழ்வாரின் கவிதை இயல்பைக் காண்பதேயாகும். சில மேற்கோள்களின் ஊடே இதனைக் காண்போம்.

இரவீந்திரநாத் டாகுர் கூறினார், மொழி பெயர்ப்பு வாயிலாகக் கவிதையை அணுகுவது என்பதே ஒரு வக்கீல் மூலமாக ஒரு பெண்ணுடன் காதல் கொள்வது போல! நம்மாழ்வாரைப் பற்றிய எனது ஆங்கில நூலிலே நான் இந்தக் கவிகளை ஆங்கில மொழி பெயர்ப்பு செய்தே விளக்க வேண்டியிருந்தது. [மூலக் கவிதையின் முழுமையை மொழி பெயர்ப்பில் கொண்டு வர இயலவில்லை. நம்மாழ்வாரின் பாசுரங்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்ப்பது என்பது அசாத்தியமான முயற்சியாகும் என்கிறார் ஸ்ரீ அரவிந்தர்.] நம்மாழ்வார் என்ற கவிஞரின் கவிதை இயல்புகளை அறிய முயலுவோம். இவரது பாசுரங்களுக்குச் சித்தாந்த ரீதியாகவும் அறிவு பூர்வமாகவும் ஈடு போன்ற மணிப்பிரவாள வியாக்கியானங்கள் பூர்வாசாரியார் காலம் முதல் இன்றுவரை ஏராளமான உரைகள் வெளிவர வர, நம்மாழ்வார் என்பவர் ஓர் கவிஞர் என்ற முக்கியத்தும் மங்கிவிடும் போலிருக்கிறது. இவரது ஆன்மிக வெளிப்பாடு சிறந்ததா கவிதை சிறந்ததா என்பதல்ல கேள்வி. இராமானுஜ வைணவ சித்தாந்தத்தின் மூலபுருடரான இவர் ஓர் ஞானியா கவிஞரா என்பதும் அல்ல கேள்வி. இப்படியெல்லாம் விவாதித்துக்

கொண்டே போனால் அதற்கு ஓர் முடிவும் இராது. எதிலும் கொண்டும் விடாது. நான் குறிப்பிட விரும்புவதெல்லாம் இதுவே: நம்மாழ்வாரின் சிறப்பு எதனாலேயிருந்தாலும் இவர் ஓர் கவிஞரும் கூட; தமிழ் இலக்கியச் செல்வத்தில் இவரது பங்கும் கணிசமானது.

தத்துவமும் ஆன்மிகமும் கவிதை போலவே தோற்றம் அளிக்கலாம். சங்கரர் சொல்கிறாரே ஸ்தூல உலகின் மாயைத் தோற்றம் பாம்பும் பழுதும் போலக் காண்கிறது என்று. அது போல. ஆனால் அவற்றின் அளவில் ஆன்மிக விளக்கங்களோ, தத்துவக் கொள்கைகளோ கவிதைகளாகி விட முடியாது. சூக்குமமான கருத்துக்கள் முதலிலே அனுபவங்களாகப் பரிணமிக்கவேண்டும்; பின்னர் அந்த அனுபவத்துக்கு ஏற்ற சொற்களால் உணர்ச்சியை வெளிப்படுத்தும் லயத்துடன் சொல்ல முடிந்தால் நாம் கவிதை உலகம் என்று கருதும் அற்புத உலகத்திற்குள் நுழைய முடிகிறது. நம்மாழ்வாரின் வாக்கிலே இந்த அற்புதம் நிகழ்கிறது.

நம்மாழ்வார் எப்போதாவதுதான் தம்மை ஒரு கவிஞராக அறிவித்துக் கொள்கிறார். அப்படிக் கூறும்போது தமது கவிதை எல்லாம் இறைவனிடமிருந்து அருவியாகச் சொரிவதாகவே பேசுகிறார்:

> என் சொல்லி நிற்பன் —
> என் இன் உயிர் இன்று ஒன்றாய்
> என் சொல்லால் யான் சொன்ன
> இன் கவி என்பித்து,
> தன் சொல்லால் தான் தன்னைக்
> கீர்த்திக்க மாயன் என்
> முன் சொல்லும் மூவுருவாம்
> முதல்வனே

[திருவாய்மொழி 7—9—2]

தனது கவிதை எல்லாமுமே இறைவனை நோக்கியே செல்கின்றன என்பதிலும் ஆழ்வார் தெளிவாக இருந்தார். 'வாய் கொண்டு மானிடம் பாட வந்த கவியேன் அல்லேன்: ஆய்கொண்ட சீர்வள்ளல் ஆழிப்பிரான் எனக்கே உளன்' என்கிறார் [திருவாய்மொழி 3—9—9]. பிற கவிஞரை விளித்து, 'மனிதர் புகழ்களைப் பாடாதீர்' என்கிறார். 'இந்த மானிடன் தன்னைப் பெரிதாக நினைத்துக் கொள்கிறான். நிலையானவனாக எண்ணிக் கொள்கிறான்; வெறும் காசுகளை நிரந்தச் செல்வம் என எண்ணி மயங்குகிறான்!

உளனாகவே எண்ணி,
தன்னை ஒன்றாகத்
தன் செல்வத்தை
வளனா மதிக்கும் இம்
மானிடத்தைக் கவி பாடி ஏன்?

[திருவாய்மொழி 3—9—2]

மேலும் பேசுகிறார்: "புலவர்களே வாருங்கள். வாழவேண்டுமானால், உடல் உழைப்புச் செய்து வியர்வை சிந்த சம்பாதிப்போம். செல்வர்களின் புகழை எதற்குப் பாடுவது? இந்த உலகில் தான் உண்மையான செல்வர் யார்?"

வம்மின் புலவீர், நும்மெய்வருத்திக்
கைசெய்து உய்ம்மினோ.
இம்மண் உலகினில் செல்வர் இப்போது
இல்லை நோக்கினோம்.
நும் இன் கவிகொண்டு
நும் நும் இட்டா தெய்வம் ஏத்தினால்
செம்மின் சுடர்முடி
என் திருமாலுக்குச் சேருமே

[திருவாய்மொழி 3—9—6]

"யார் இனிய பாடல்களால் எந்த இஷ்ட தெய்வத்தைத் தொழுதாலும் அந்தத் தோத்திரங்கள் யாவுமே என் திருமாலுக்குச் சேர்ந்ததாகக் கருதிக்கொள்கிறேன்." 'மாய மனிசரை என் சொல்லவல்லேன் என் வாய் கொண்டே? [திருவாய்மொழி 3—9—8]. என்கிறார்.

இது யுகயுகமாக வழங்கும் வழக்குத்தானே. விவிலியத்தில் ஒரு வாக்கு உண்டே: "என் நாட்கள் நெய்கிறவன் எறிகிற நாடாவிலும் தீவிரமாய் ஓடுகிறது. அவைகள் நம்பிக்கையில்லாமல் முடிந்துபோகும்." [யோபு 7—6] "உலகில் நிற்கும் மனிதன் ஒவ்வொருவனும் காற்றிலே ஒரு ஊதலே; நடப்பவன் எவனும் வெறும் நிழலே"

[துதிகள் 39. 5 .6.]

மனிதன் மட்டுமே இப்படி அலறுகிறான். அந்த உணர்வு எழக் காரணம், இந்த அழியும் உடலையும் அதனுள்ளே சிறைப்பட்டுள்ள உணர்வையும் அவன் தெரிந்து அவற்றுக்கிடையே உள்ள உரசலைப் புரிந்து கொண்டுவிடுவதால். மனிதத் தொடர்புள்ள எதுவும், இங்கு

மனிதவாழ்வின் அதிருப்திக்குள்ள பொருளேயானாலும் அது கவிதைப் பொருளே. நம்மாழ்வாரின் கவிதைகளிலே சில இப்படிப்பட்டவை. [மெய்ப்பொருளை நோக்கி என்ற அத்தியாயத்தின் தொடக்கப் பகுதியினைக் காண்க.] அவருக்கு மனிதன் என்பவன் நிலையில்லாத, மின்னலைப்போன்ற வாழ்வுடையவன்; மழை நீர்க்குமிழி போன்றது அவன் வாழ்வு.

'மின்னின் நிலையில மன்னுயிர் ஆக்கைகள்'

[திருவாய்மொழி 1–2–2]

'வாழ்ந்தார்கள் வாழ்ந்தது மாமழை
மொக்குளின் மாய்ந்து மாய்ந்து
ஆழ்ந்தார்'

[திருவாய்மொழி 4–1–6]

முதுமையின் துன்பங்களையும் துயரங்களையும் விவரிக்கிறார்: 'இளமையிலே செல்வச் செழிப்போடு சுவையான உணவையும் பெண்டிரையும் சுகித்தது என்ன! இப்போது ஒரு பிடி சோற்றுக்கு இளைத்த கரத்தை நீட்டுவது என்ன' என்று வியப்பை வெளிப்படுத்துகிறார்.

ஆம் இன் சுவை அவை ஆறோடு
அடிசில் உண்டு ஆர்ந்தபின்
தூமென் மொழி மடவார் இரக்கப்
பின்னும் துற்றுவார். ஈமின் எமக்கு
ஒரு துற்று என்று இடறுவர்: ஆதலின் [திருவாய்மொழி 4–1–7]

இதுமட்டுமா? அரண்மனையிலே அதிரும் முரசொலி நின்று விடுகிறது.

ஒரு நாயகமாய் ஓட உலகு உடன்
ஆண்டவர், கருநாய் கவர்ந்த காலர்,
சிதைகிய பானையர்
பெருநாடு காண இம்மையிலே
பிச்சைதாம் கொள்வர் திருவாய்மொழி 4–1–1]

நிலைத்த மெய்ப்பொருளை நாடுவதற்குத் தொடக்கமாவது இந்த மண்ணுலகத்துப் பற்றை அறுத்தலே என்பது நம்மாழ்வாரின் எண்ணம். இதனைப் பலவகை உருவகங்களாக உணர்த்துகிறார். இந்த அளவுக்கு இவர் பழம் சங்கப் புலவர்களை விட்டு ஒதுங்குவதாகத் தோன்றுகிறது. [இவற்றிலும் சில வித்தியாசமானவை உள்ளன. திருமுருகாற்றுப்படையும் பரிபாடலின் சில செய்யுள்களும் கடவுள் பற்றியவை. ஆனால் அவற்றிலே

ஆழ்வார் நாயன்மார் பக்திப் பாசுரங்களில் உள்ளன போான்ற தாபமும் ஏக்கமும் தனித்த ஈடுபாடும் தொனிப்பதில்லை.] சங்க காலப் பாடல்களின் ஆசிரியர்கள் பெரும்பாலும் இயற்கையும், மனிதனுமே நாடகமேடையாயும் நடிகராயும் கொண்டு தமது நுட்பமான நோக்கினால் கண்டனவற்றையெல்லாம் விவரிக்கும் பாடலாக்கினர். இந்த அளவில் நம்மாழ்வார் அவர் காலத்துச் சமயக் கவிஞராயும் இறையருள் பெற்ற தத்துவக் கவிஞராயும் திகழ்ந்தார். அந்தக் காலத்து இயல்புப்படி நம்மாழ்வார் எல்லாப் பொருள்களையும் துறந்தவராதலின் சிறந்தவரானார்; மெய்ப்பொருள் நாடுபவருள் உயர்ந்தவரானார்.

மேலும் மண்ணுலகைத் துறத்தலோ வெறுத்தலோ, "ஒரு துருவத்திலிருந்து மறு துருவத்துக்குப் பரவி மூடும் இருள்" என்பனவெல்லாம் கூடக் கவிதையாகலாம், கவிஞனின் கற்பனை ஸ்தூல உலகை ஒட்டியதானால், இதுதான் நம்மாழ்வாருக்கு நேருகிறது. திரும்பத் திரும்ப. உதாரணமாகப் புலன் இன்பங்களின் பயனின்மை இங்கே தெளிவாகக் கூறப்படுகிறது, சூட்சுமத்தைச் சுட்டும் விவரங்களுடன்!

பணிமின் திருவருள் என்னும்
அஞ் சீதப் பைப் பூம் பள்ளி
அணி மென் குழலார்
இன்பக் கலவி அமுதுண்டார்
துணி முன்பு நாலப்
பல் ஏழையர் தாம் இழிப்பச்
செல்வர். [திருவாய்மொழி 4—1—5]

அழகிய கூந்தலும் ஆபரணமும் கொண்ட பெண்டிருடன், இருந்து இன்பம் துய்த்தார்களாம் ஒரு கணம்; நடப்பது என்ன என்று தெரிவதற்குள், இவர்கள் பார்த்தவர் இழிந்து பேசும்படி அரைகுறை ஆடையுடன் ஏழையராய் உலவுகிறார்களே, என்ன இது!

மனித உறவுகளால் ஒரு திருப்தியும் ஏற்படுவது இல்லை என்ற கருத்தினை வெளியிடும் பாடல்:

கொண்ட பெண்டிர், மக்கள், உற்றார்
சுற்றத்தவர் பிறரும்
கண்டதோடு பட்டது அல்லால்
காதல் மற்று யாதும் இல்லை! [திருவாய்மொழி 9—1—1]

இது இல்லை உறவு என்றால் மற்று எதுதான் உறவு? இறை அருளே என்றும் நிலைத்த உறவு. சீதப் பைம் பூம் பள்ளி [4–1–5] போன்ற குளிர்ந்த மென்மையான மலர் மஞ்சம் அது; உற்றாரும் சுற்றத்தாரும் 'அணைய வந்த ஆக்கம் உண்டேல் அட்டைகள் போல் சுவைப்பர்' [9–1–2]. செல்வம் சேர்ந்துவிட்டால் அட்டைகளைப் போல ஈரம் அறச் சுவைத்து விடுவார்களாம். கொடுவினை என்னும் புதற்காட்டிலே வழிகாணாமல் திகைக்கிறது ஆன்மா. 'கூவிக் கூவிக் கொடு வினைத்தூற்றுள் நின்று பாவியேன் பல காலம் வழிதிகைத்து அலமர்கின்றேன் [3–2–9]. வேறு பரிகாரம் உண்டோ தெரியவில்லையே. 'ஐம்புலன்களாகிய நோயாலே இவ்வான்மாவை முடிக்கும் சரீரமாகிய செக்கில் இட்டு வருத்துகின்ற ஐம்பொறிகள்' என்கிறார்.

'தீர் மருந்து இன்றி ஐந்து நோய் அடும் செக்கில் இட்டுத் திரிக்கும் ஐவரை நேர் மருங்கு உடைத்தா அடைத்து நெகிழ்ப்பான்'

[திருவாய்மொழி 7–1–5]

இதெல்லாம் என்ன. மண்ணுலகத் துறத்தலா! அப்படித்தான் தோன்றுகிறது. ஆனால் மண்ணைத் துறக்க முயல்வர் சுட்டும் உவமையெல்லாம் மண்ணுலகத்துக் காட்சிகளே யன்றோ! முதல் தோற்றத்தில் உலகம் பொருளற்ற மாயத் தோற்றமாகக் காண்கிறது ஆழ்வாருக்கு.

பின்னர் இப்படி ஓர் உலகம் உண்டு எனத் தெளிந்து காட்சிகளை வருணிக்கிறார். பின்னர் மேல்நிலையில் மயக்கம் அறுகிறது.

ஆழ்வார் மெய்பொருளை நோக்கி உயர்நிலைக்கு ஏறிச் செல்லச் செல்ல தேடல் என்னும் நாட்டம் அவரை ஆட்டிவைக்கும் ஆர்வமாகிறது. இந்த நிலையில் அவரது பார்வையில் இயற்கை நிகழச்சிகள் எல்லாம் தனது நாட்டத்தையே கொண்டுள்ளதாகத் தோன்றுகிறது.

வாயும் திரை உகளும் கானல் மட நாராய்
ஆயும் அமர் உலகும் துஞ்சிலும் நீ துஞ்சாயால்
நோயும் பயலைமையும் மீதுஊர எம்மேபோல்
நீயும் திருமாலால் நெஞ்சம் கோட்பட்டாயே.

[திருவாய்மொழி 2–1–1]

"கடற்கரைச் சோலையில் உள்ள மடநாராய்! என் தாய் உறங்குகிறாள். தேவர்கள் உறங்குகிறார்கள். நீயோ தூங்கக் காணோம். என்னைப் போல நீ கூட நோயும் பசலையும் சரீரமெங்கும் பரவும்படி திருமாலால் நெஞ்சம் கொள்ளப்பட்டாயோ, சொல்!"

2–1–1

"அன்றில் பறவையே. உன் கூவல் நெஞ்சைப் பிழிகிறது. இரவின் எல்லா யாமங்களிலும் ஒலிக்கின்றாயே நீயும் உன் இதயத்தை அவனுக்கு இழந்துவிட்டாயா? அவன் அணியும் மணமிக்க துளசி மாலைக்கு ஏங்குகிறாயோ'

2–1–2

என்ன, இது வேடிக்கை! அலைமோதும் கடலே, இரவும் பகலும் நீ ஏன் அழுது புலம்புகிறாய்? நீயும் என்னைப்போல் உன் இதயத்தை அவனிடம் இழந்துவிட்டு இப்போது ஏங்குகிறாயோ? அவன் இணையடிகளின் தஞ்சம் வேண்டி ஏங்குகிறாயோ?

'தீமுற்றத் தென்னிலங்கை ஊட்டினான்
தாள் நயந்த யாம் உற்றது உற்றாயோ!' 2–1–3

'எங்கும் சுற்றிவரும் காற்றே!
கடலும் மலையும் விசும்பும் துழாய்
எம்போல் சுடர் கொள் இராப்பகல்
துஞ்சாயால் தன் வாடாய்
அடல்கொள் படை ஆழிஅம்மானைக்
காண்பான் நீ உடலம்நோய் உற்றாயோ?
ஊழிதோறு ஊழியே! 2–1–4.

ஊழிதோறு ஊழி உலகுக்கு நீர் கொண்டு
தோழியரும் யாமும் போல் நீராய் நெகிழ்கின்ற
வாழிய வானமே! நீயும் மதுசூதனன்
பாழ்இமையில் பட்டு அவன் கண் பாசத்தால் நைவாயே.

2–1–5

நைவாய எம்மேபோல் நாண் மதியே
நீ இந்நாள் மைவான் இருள் அகற்றாய்
மாழாந்து தேம்புதியால்

ஐவாய் அரவணை மேல் ஆழிப்பெருமானார்
மெய்வாசகம் கேட்டு உன் மெய்நீர்மை தோற்றாயே. 2-1-6

தோற்றோம் மட நெஞ்சம்
எம்பெருமான் நாரணற்கு எம்
ஆற்றாமை சொல்லி அழுவோமை நீ நடுவே
வேற்றோர் வகையில் கொடிதாய்
எனை ஊழி மாற்றுண்மை நிற்றியோ
வாழி கனை இருளே! 2-1-7

ஆழ்வார் தனித்து இல்லை என்று தோன்றுகிறது. இவருடன் பிரபஞ்சம் அனைத்துமே தன்னைப் படைத்தவனைச் சேரத் துடிக்கிறது.

இந்தப்பகுதி ஒரு காதல் கவிதை வடிவில் அமைந்துள்ளது. பேசுவது காதல் வயப்பட்ட ஒரு பெண், சொல்லப்போனால் காதல் வயப்பட்ட பல பெண்களின் கூற்று இது: ஆண் பெண்ணிடையே உள்ள உறவு தான் என்று இல்லை, எல்லா வகை மனித உறவுகளையும் நம்மாழ்வார் கடவுளை நோக்கித் திருப்பும் பிணைப்புகளாக்குகிறார். எல்லா உறவுகளிலும் தொடக்கத்திலே தோன்றும் அநித்தியத்தையும் பிடிப்பின்மையையும் மீறிப் பார்க்கிறார். 'மாதாவினைப் பிதுவை திருமாலை வணங்குவனே' [திருவிருத்தம்—95] என்று இறைவனைப் பேசுகிறார். 'ஏதேனும் ஓர் உடலில் புகுந்து அதில் பந்தத்தை அனுபவித்தும் அக்கட்டிலிருந்து விலகியும் மாறி மாறிக் காலம் காலமாய் அலையும் ஆன்மாக்கள்' என்கிறார். திருவாய்மொழியில் [2—3—2] 'அத்தாய் ஆய், தந்தை ஆய், அறியாதன அறிவித்த, என்று ஒத்தாரும் மிக்காரும் இல்லாத மாமாயனைப் பாடுகிறார். இந்தப் பாசுரத்திலே இறைவனே வேந்தனும் ஆகிறான்.

சீர் அரசாண்டு தன் செங்கோல் சிலநாள்
செலீஇக் கழிந்த
பார் அரசு ஒத்து மறைந்தது நாயிறு — பார் அளந்த
பேர் அரசே! எம் விசும்பு அரசே! எம்மைநீத்து
வஞ்சித்த ஓர் அரசே!
அருளாய் இருளாய் வந்து உறுகின்றதே! [திருவிருத்தம்—80]

வேறு ஓர் இடத்திலும் நம்மாழ்வார் ஆண்டவனை அரசனாகக் காண்கிறார்.

'வீற்றிருந்து ஏழ்உலகும் தனிக்கோல் செல்ல, வீவுஇல்சீர்
ஆற்றல்மிக்கு ஆளும் அம்மானை' [திருவாய்மொழி 4–5–1]

மாமன்னன், உலகம் அளந்தவன், அமரர் தலைவன், அது மட்டுமா? எல்லாம் அறிந்தவன் அவன். உலகம் தனது அறிவால் குழம்பிக் கிடக்க அதைத் தெளிவிப்பவன் அவன். அவனை நோக்கிச் செல்லும் நெறிகளும் அவனே தான் என்ற கருத்தில்

அறிவினால் குறைவு இல்லா அகல்ஞானத்தவர் அறிய,
நெறி எல்லாம் எடுத்து உரைத்த, நிறை ஞானத்து ஒரு மூர்த்தி
[திருவாய்மொழி 4–8–6]

என்றார். தெளிவின்மைக்குத் தெளிவு தருபவன் ஆகிறான். குருவாய் உபதேசித்தும், கடவுள் அன்பர்களுக்கு என்றும் நம்புதற்குரிய நண்பன் ஆகிறானாம். 'மாயம் அறிபவர் மாயவற்கு ஆள் அன்றி ஆவரோ?' [திருவாய்மொழி 7–5–9]. எல்லாவற்றுக்கும் மேலாகக் கடவுள்தான் ஆழ்வார் அன்புக்கு ஏங்கும் காதலனும் ஆம். மானுடக் காதல், ஆணையும் பெண்ணையும் பிணைத்து வைக்கும் அடிப்படை உணர்வு ஆழ்வாரின் வாக்கிலே ஒரு குறியீடாகிறது. இறைவன் மீது தமக்குள்ள ஆழமான அன்பைப் புலப்படுத்த இவர் பயன்படுத்தும் குறியீடுகளில் அழுத்தமானது. திருவிருத்தத்திலும் திருவாய்மொழியிலும் பல இடங்களில் இக் குறியீட்டினாலே ஆழ்வார் தம்மை வெளிப்படுத்துகிறார். அந்த இடங்களில் எல்லாம் ஆழ்வார் மானுடக் காதலை அழுத்தமாக வெளியிடும் பாங்கிலே, அது தானாகவே வையத்தில் தொடங்கி நம்மை வானுக்கு எடுத்துச் செல்கிறது. மெய்மறந்து இரண்டு தளங்களில் ஒரே சமயத்தில் உலவுகிறார் ஆழ்வார். மண்ணுலகக் காதலைக் கவிதையில் விவரமாக வர்ணிக்கும் போது தத்துவ உபதேசத்துக்கான வெறும் உருவகமாகத் தெரிவதில்லை; மானுடம் என்பதின் இயக்கும் சக்தியையே விவரித்து விடுகிறார். இந்த உருவகத்தில் தெய்வீக உணர்வு தொடர்ந்து நிறைந்து இருப்பதால் இது வெறும் மானுடக் காதல் கவியாக மட்டும் நின்று விடுவதில்லை.

ஆனால் மண்ணுலகத்துக் காதலின் விவரங்களும் உணர்ச்சிகளும் நிறைந்த பாடல்கள் இவை. எனவேதான் சிறந்த கவிதைகளாக விளங்குகின்றன.

காதல் வயப்பட்ட எத்தனையோ பெண்களைப் போல [பராங்குச நாயகி என வியாக்கியான காரர்கள் விவரிக்கும்] ஆழ்வாரும் தனது காதலனுக்கு ஒரு செய்தி அனுப்ப விழைகிறாள். தம்மைச் சுற்றியுள்ள இயற்கை உலகத்தைச் சேர்ந்தவர்களே தூதர்கள் – பறவை, மேகம், வண்டு, காற்று என்று இப்படி ஆழ்வாரின் கவனம் ஒவ்வொன்றின் மீதும் பதிகிறது.

அம் சிறைய மட நாராய்!
அளியத்தாய்! நீயும் நின்
அம் சிறைய சேவலுமாய்
ஆ ஆ என்று எனக்கு அருளி

[திருவாய்மொழி 1–4–1]

கருடனை வாகனமாகக் கொண்ட திருமாலிடம் தூது செல்ல வேண்டுகிறார். பறவை அலட்சியம் செய்வதாகக் கருதி மனம் வருந்துகிறார்:

நீ அலையே? சிறு பூவாய்!
நெடுமாலார்க்கு என் தூதாய்
நோய் எனது நுவல் என்ன,
நுவலாதே இருந்து ஒழிந்தாய்
சாயலொடு மணிமாமை
தளர்ந்தேன் நான்: இனி உனது
வாய்–அலகில் இன்–அடிசில்
வைப்பாரை நாடாயே!

[திருவாய்மொழி 1–4–8]

'எனது வேதனையை நெடுமாலார்க்குத் தூது சொல்ல அனுப்பினேனே. செய்யவில்லையே! மேனி வாடி வெளுத்துப் போய்விட்டேன். போ, போ. வேறு யாராவது இனிப்புப் பண்டம் வைத்தால் போய்த் தின்னுவாய், போ' என்று பொருமுகிறாள் காதல் வயப்பட்ட பெண்.
குயிலை நோக்கி இப்பாடல்:

என் செய்ய தாமரைக்கண் பெருமானார்க்கு என் தூதாய்
என் செய்யும் உரைத்தக்கால்?
இனக் குயில் காள்! நீர் அலிரே?
முன்செய்த முழுவினையால் திருவடிக்கீழ் குற்றேவல்

முன் செய்ய முயலாதேன் அகல்வதுவோ? விதியினமே.

[திருவாயமொழி 1–4–2]

'ஏ குயில்களே! தாமரைக்கண் பெருமானிடம் என் தூதராய்ச் செல்ல மாட்டீர்களா? சென்று, எனது செய்தியைச் சொன்னால் என்ன குறைந்து விடுவீர்கள்? என்ன சொல்ல வேண்டும்? இங்கே நான் என் முன் வினைப் பயனால் அவனுக்குக் குற்றேவல் செய்ய இயலாது இருக்கிறேன் என்பதைச் சொல்லுங்கள்'.

நீல மகன்றில் என்று ஒரு பறவை. அதனைப் பார்த்துப் பேசுகிறார்.

என் நீர்மை கண்டு இரங்கி,
இது தகாது என்னாத
என் நீல முகில் வண்ணற்கு
என் சொல்லி யான் சொல்லுகேனோ?
நன்நீர்மை இனி அவர்கண் தங்காது
என்று ஒரு வாய்ச் சொல்
நன் நீலமகன்றில்காள்!
நல்குதிரோ! நல்கிரோ?

[திருவாய்மொழி 1–4–4]

'நீலமேகவண்ணனுக்கு இது தெரியாது, இங்கே ஒருத்தி வாடுகிறாள். இப்படி இராதே என்று ஒரு பேச்சு சொல்லமாட்டானா? அவனிடம் நீர் எனக்காகத் தூது செல்லமாட்டீர்களா?'

வேதனை தொடர்கிறது. 'எனது செய்தியை எவர் எடுத்துச் சொல்லுவார்?' என்று தவிக்கும்போது அருகே ஒரு வண்டு ரீங்காரமிடுகிறது. ஆழ்வார் அதனிடம் சொல்லுகிறார்:

அருளாத நீர் அருளி,
அவர் ஆவி துவராமுன்
அருள் ஆழிப்புட் கடவீர்
அவர் வீதி ஒரு நாள் என்று
அருள் ஆழி அம்மானைக்
கண்டக்கால், இது சொல்லி
அருள்: ஆழிவரி வண்டே! யாமும்
என் பிழைத்தோமே?

[திருவாயமொழி 1–4–6]

'ஏ வண்டே, நீ செல்லும் வழியில் அந்தச் சக்கரக் கையனைச் சந்தித்தால் சொல்லுவாய்: "நேரம் கடத்துகிறாயே, அவள் ஆவி

உலர்ந்து போவதற்கு முன்பு ஓடி வா! கருடன் மீது கடல் எனப் பரந்த இறகுகள் வீச அவள் இருக்கும் இடம் நோக்கி விரைந்து வா" என்பாயாக!'

வீசும் காற்று மேலே படுகிறது. அடடா, எங்கும் சுழலும் காற்று தனது செய்தியைத் தூது சொல்லாதோ! ஆனால் காற்றிடம் சொல்லி அனுப்ப வேண்டிய செய்தி தொண்டையிலே சிக்கிக் கொள்கிறது. இந்த வாடைக் காற்று உராய்ந்து செல்லும்போது ஏதோ சொல்வது போல இருக்கிறதே — கருணையே வடிவான நாராயணன், வாடாத மலர்களைத் தனது திருவடிகளைச் சேரத் துடிக்கும் உயிர்களைப் போலவே அவற்றை ஏற்கத் துடிப்பவன் அவன். அப்படிப்பட்டவன் இப்போது பராமுகமாக இருப்பது ஏன்? இது அவனது இயல்பு அல்லவே என்று ஆழ்வார் வியக்கிறார். அப்படி அவன் என்னை ஒதுக்கினால், என்னைச் சாகவிடு, வாடைக்காற்றே!

> நாடாத மலர்நாடி, நாள்தோறும் நாரணன் தன்
> வாடாத மலர் அடிக்கீழ் வைக்கவே வகுக்கின்று;
> வீடாடி வீற்றிருத்தல் வினை அற்றது என் செய்வதோ?
> ஊடாடு பனி வாடாய்! உரைத்து ஈராய் எனது உடலே.
>
> [திருவாய்மொழி 1–4–9]

உணர்ச்சி வெள்ளம் பொங்குகிறது. நம்மாழ்வாரின் கவிதைகளில் திருமண பந்தத்தைக் குறிப்பிடும் தோறும் அது ஜீவனுள்ள கவிதையாகப் பொலிகிறது. இந்தப் பாடலில் வருந்தும் தலைமகள் அவனுடன் காதல் கொண்டமைக்குத் தன்னைத் தானே நொந்து கொள்கிறாள்.

ஊர் எல்லாம் தூங்குகிறது. உலகம் நள் இருளிலே ஆழ்ந்துள்ளது. காலம் எல்லாமே சேர்ந்து நீண்ட இரவாகி விட்டதோ. அவன் வரவில்லை என்றால் என்னை, இந்தப் பாவியை, மீட்பவர் யாரோ?

சிவந்த ஆதவனின் சுடர்த்தேர் கிழக்கே தோன்றவே தோன்றாதோ? இந்த இரவும் நீங்கவே நீங்காது தேய்ந்து துளித்துளியாக என்னைப் போல மடியுமா? உலகம் உறங்குகிறது. கவலையின்றி உணர்வுமின்றி. நானோ விழித்திருக்கிறேன். எனது மூட நெஞ்சமே, ஏன் அவனை நேசிக்கிறாய்? ஏனோ! [திருவாய்மொழி 5–4]

இதே பாணியில் மற்றொன்று:

தென்றல் தாங்கிவரும் மல்லிகை மணம் என்னை வாட்டுகிறது. மலையிலே மிதந்து வரும் குறிஞ்சிப் பண்ணுடன் [பழந்தமிழ்ப்பாடல்] மாலை நேரத்து செவ்வொளி என்னை மயக்குகிறது. மேற்கே சுடரும் மேகங்கள் என்னைச் சிதைக்கின்றன. அழகிய தாமரைக் கண்ணன் என் தோள்களையும் மார்பையும் புல்லியுள்ளானே. இனி எங்கே எனக்குப் புகலிடம்?

[திருவாய்மொழி 9–9–1]

தெய்வீக வண்டு உறிஞ்சி நுகர்ந்த மலர் நானேதான். எப்படித் தாங்குவேன்? இனி இந்த இதயமும் என்னுடையதில்லை. அது எனக்கு உதவாது. எங்கே நான் தேடுவேன் புகலிடம்?

[திருவாய்மொழி 9–9–4]

இந்தப் பாடல்களிலே புலம்பும் பெண் [ஒருத்தியேதானோ, பல பெண்களின் அனுபவம் போலும் உள்ளன] பலரைப் பார்த்துப் புலம்புகிறாள்; இறைவனை விளிக்கிறாள். தன்னையே பார்த்துப் பேசுகிறாள். தன்னைச் சுற்றியுள்ள ஏதாவது பொருள்களையும் உயிரினங்களையும் பார்த்துப் புலம்புகிறாள். சில நேரங்களில் அந்தக் காதல் வயப்பட்ட தலைமகள் தன் தாயுடனோ, கிராமத்துத் தாய்மாரிடமோ பேசுகிறாள். ஒரு தோழியே இவ்விதம் பேசுவதும் உண்டு. மகளின் நிலை பொறுக்காத தாயின் கூற்றாகவும் சில பாடல்கள் அமைகின்றன. இவ்வாறு பல நாடக உத்திகள் நிறைந்த கவிதைகள், பலரது வாக்கிலே வெளிப்படும் அனுபவங்களைக் காட்டி, எல்லாம் ஒரே செய்தியைத் தெரிவிக்கின்றன – ஆழ்வாரின் அடங்காத பக்திக் காதலை!

காதல் வயப்பட்ட பெண் காதலனை நோக்கிக் கூவுகிறாள். அவளது அழைப்புக்கு பதில் இல்லை. "தலைமீது கைகூப்பிக் காலந்தோறும் கூப்பிடுகின்றேன். நீ வரமாட்டாயோ? உனது கோலமேனியை நான் காண வாராயோ" என் கூவலுக்குப் பதில் தாராயோ? ....

[திருவாய்மொழி 4–7–1]

நான் கூவுகிறேன்: வா, என் கண்முன்னே வா, "ஆணிச் செம்பொன் மேனியனே! தாமரைக் கண்ணனே! நின்று அருளாய்" என்று நான் கூவுவேன் நாணம் இன்றி. இப்படிக் கூவி என்ன பயன்? அவனோ தேவர்க்கும் எட்டாதவனாக இருக்கிறானே!

[திருவாய்மொழி 4– 7 –4]

மற்றொரு பாசுரம். இதிலே நாயகி ஊர்த் தாய்மார்களுடன் பேசுகிறாள். அவர்களுக்கோ இந்தப் பெண்ணின் போக்குப் புரியவில்லை. இவளது விசித்திரமான பாசத்தைக் கண்டு குழம்புகிறார்கள்.

"தாய்மார்களே! உங்களுக்கு என் மீது என்ன கோபம்? திருக்குருங்குடி நம்பியை எப்போது நான் முதன்முதல் பார்த்தேனோ அப்போது, அந்த அவனது சங்கோடும் சக்கரத்தோடும், செங்கனி வாயோடும் சென்றது என் நெஞ்சம்.

"எனது நெஞ்சம் அவனோடு சென்றுவிட்டது. நான் என்ன செய்வேன். எனது நெஞ்சைப் பாருங்கள். என் முன்னே எங்கும் நீங்காது இருக்கிறான் அவன், பாருங்கள்.

என்னைக் கோபிக்காதீர் அன்னைமீர்களே! எனது கண்முன்னே, எனது நெஞ்சின் உள்ளே அவன் எப்போதும் நிற்கிறான். அவனது வெற்றி வில்லுடன், தண்டும், வாளும், சக்கரமும் சங்கும் ஏந்தி நிற்கிறான்."

[திருவாய்மொழி—5—5]

மற்றும் ஒரு பாசுரம் காதல் வயப்பட்ட பெண் தனது தோழியருடன் பேசுவதாக.

"மான்விழிப் பெண்களே. சொல்லுங்கள், பாவியேன் திருவல்லவாழில் [கேரளத்தில் உள்ள ஊர்] உறையும் அவன் மீது காதலால் வாடுகிறேன். வாள் ஆர் வண் கமுகும் மது மல்லிகை கமழும் தேன் ஆர் சோலைகள் சூழ்ந்த இந்த ஊரில் வாழும் பெருமாள் அடியை அடியேன் கூடுவது எப்போது என்று சொல்லுங்கள்.

"தோழியரே, என்னை நீர் நலிந்து பயனில்லை, பொன் திகழ் புன்னை, மகிழ், புது மாதவிக்கொடி என்று அணைந்து வரும் தென்றலின் மணம் கமழும் திருவல்ல வாழ் நகரிலே நிற்கும் பிரான் திருவடியை நான் எப்போது சூடுவேன், சொல்லுங்கள்."

[திருவாய்மொழி 5.9 – 1.2]

இன்னொரு பாசுரம், தோழிக்கு உரைக்கும் வாசகமாக.

"ஊரார் பேச்சு எருவாகிறது. அன்னையின் கோபப் பேச்சு நீர் பாய்ச்சலாகிறது. இவையெல்லாம் என் நெஞ்சிலே அவன் விதைத்த ஈர நெல்லை விதைத்து முளைத்தது போலாகிறது. ஆமடி, கடியன் அவன். மேக வண்ணனின் காதல் அவன் இருக்கும் கடலைப் போலவே பெரிது பார்.

[திருவாய்மொழி 5–3–4]

காதல் வயப்பட்ட பெண் காதலன்மீது கோபம் காட்டுகிறாள். சிறு பெண்ணைப் போலப் பேசுகிறாள். இணங்க மறுக்கிறாள். தன்னையும் தோழியரையும் காதலன் ஏமாற்றியதாகக் கடிகிறாள். அவர்களது ஆர்வம் அனைத்தையும் அலட்சியப்படுத்துகிறாள். விளையாட மணலில் எழுப்பிய சிற்றில்களையும் விளையாட்டுத் திண்டிகளையும் பொருட்படுத்தாது இருக்கிறாள். "போதும் உனது உறவு" என்று ஊடல் காட்டுகிறாள். மனித குலம் காலம் காலமாய்க் கடவுளிடம் ஆசை கொண்டு, தனது விளையாட்டுப் பொருள்களின் மீது அவன் கருத்துக் காட்டவில்லையே என்று வருத்தப்படுகிறதே, இந்த வேதனையைக் குறிப்பாக வெளிப்படுத்தும் பாடல் வரிகள்.

மண்உடை இலங்கை அரண் காய்ந்த மாயவனே,
உன்னுடைய சுண்டாயம் நான் அறிவேன்.
இனி அது கொண்டு செய்வது ஏன்?
என்னுடைய பந்தும் கழலும் தந்துபோகு.

[திருவாய்மொழி 6–2–1]

நம்பீ! உன் கைதவம் மண்ணும் விண்ணும் நன்கு அறியும். அழிக்கும் வல்லமைமிக்க சக்கரக் கையனே, உனக்கு ஒன்று உணர்த்துவன் நான். தேன்மொழியாளரான என்னைப் போன்றவர்கள் உனது அருள் நாடி மனம் வாடி நிற்க எங்களது பூவையோடும் கிளியோடும் விளையாடாதே. [திருவாய்மொழி 6–2–5]

நாயகியின் ஒரு தோழி ஊர்த் தாய்மார்களிடம் பேசுவதாக ஒரு பாசுரம் : ஆழ்வார் திருநகருக்கு அருகில் உள்ள தொலைவில்லிமங்கலம் பற்றியது. "அன்னைமீர் உமக்கு இவள்! மீது ஆசை இல்லை. இவளைத் தனியே விடுமினோ. நீலத்தாமரை விழிகளிலே கண்ணீர் தேக்கி அவனது வெள்ளைச் சங்கையும் சக்கரத்தையும் தாமரைக் கண்ணையுமே பற்றிப் பேசுகிறாள் இவள். அவன் இருக்கும் தொலைவில்லிமங்கலம் என்னும் ஊரைத் தொழுகிறாள். இவளைத் தனியே விட்டுவிடுங்கள்.

"அன்னைமீர்களே, இவள்மீது உமக்கு ஆசை இல்லாமல் அகற்றி வீட்டீர். இவளோ தொலைவில்லிமங்கலம் போய்விட்டாள். கண்களிலே நீர் மல்க, நெக்கு, ஒசிந்து, கரைந்து தேவ தேவபிரான் என்றே நிமியும் வாயுடன் இருக்கிறாள். திரைகொள் கடலிலே இருப்பதையும் திசை ஞாலம் தாவி அளந்ததும், கன்றுகள் மேய்த்ததும் பற்றிப் பிதற்றி நெடும் கண்நீர் மல்க நிற்கிறாள். அவளை விட்டு விடுங்கள், போகட்டும்."

[திருவாய்மொழி 6.5]

இந்த பாசுரம் நாயகியின் தாயின் கூற்றாக வருவது:

மாலுக்கு
வையம் அளந்த மணாளற்கு
நீலக் கருநீல மேக நியாயற்கு
கோலச் செந்தாமரைக் கண்ணற்கு
என் கொங்கு அலர் ஏலக் குழலி
இழந்தது சங்கே...

கொங்கு அலர் தண் அம்துழாய் முடியானுக்கு
என் மங்கை இழந்தது — மாமை நிறமே....
நிறம் காரியானுக்கு
நீடு உலகு உண்ட
திறம் கிளர் வாய்ச் சிறுக் கள்வன் அவற்கு
கறங்கிய சக்கரக் கையவனுக்கு,
என் பிறங்கு இரும்கூந்தல்
இழந்தது — பீடே ...
இழந்தது — கற்பே ...

[திருவாய்மொழி 6—6]

நாயகி தனது தோழியிடம் கூறுகிறாள்:
"தோழி, ஊரவர் ஏசுவரே, அது என்னை என்ன செய்யும்? என் நெஞ்சையும் அறிவையும் தான் ஆதி மூர்த்தியிடம் அர்ப்பணித்து விட்டேன்!"

ஆசு அறு சீலனை ஆதி மூர்த்தியை நாடியே
பாசறவு எய்தி அறிவு இழந்து எனை நாளையம்?
ஏசு அறும் ஊரவர் கவ்வை தோழீ! என் செய்யுமே

[திருவாய்மொழி 5— 3—1]

"தோழி! நாணத்தையும் இழந்தேன். எனது கன்னி நிறைவையும் எனது நெஞ்சையும் கவர்ந்து கொண்டு விட்டான் வானத்துள்ள தேவ பிரான். பெண்கள் இயல்பு இல்லை என்றாலும் நான் இதனை ஊருக்கும் உலகுக்கும் எடுத்துச் சொல்ல வெட்கம் விட்டுப் பனை மடல் ஊரப் போகிறேன்".

நாணும் நிறையும் கவர்ந்து
என்னை நல் நெஞ்சம் கூவிக் கொண்டு
சேண் உயர் வானத்து இருக்கும்
தேவபிரான் தன்னை
ஆணை என் தோழீ! உலகுதோறு அலர் தூற்றி,
ஆம் கோணைகள் செய்து குதிரியாய்
மடல் ஊர்துமே.

[திருவாய்மொழி 5–3–9]

நாயகியை ஏதோ படுத்துகிறது என்று செவிலித் தாயர் அவளுக்குச் சிகிச்சை அளிக்கிறார்கள். இதனைக் கவனித்து நாயகியின் தோழி பேசுவதாக ஒரு பாசுரம்: "அன்னைமீர்களே! இந்தப் பெண்ணின் அழகிய முகத்தில் மண்டிக் கிடக்கும் மயக்கத்தை தீர்ப்பது எப்படி? இவளது கவனமோ அன்று பாண்டவர்களுக்கு போரில் உதவி, தேர்ப்பாகனாக விளங்கியவனை நோக்கிச் சென்று விட்டதே!

"தாய்மாரே, கட்டுவிச்சியின் பேச்சைக் கேட்டு ஏதாவது செய்து விட வேண்டாம். கள்ளும் இறைச்சியும் படைக்க வேண்டாம். இவளது மயக்கம் அகற்றத் துழாய்முடியன் புகழ் பாடக் கேட்பதே இவளது நோய்க்கு மருந்தாகும்.

"அன்னைமாரே, அவளிடம் புகுந்ததுள்ளதாக நீங்கள் கருதும் பேய்களை ஓட்ட முயலவேண்டாம். அப்படிச் செய்யச் செய்ய அவளது வேதனை மிகும். அவளுக்கு ஒரே மருந்து மாயன் அடியார்களின் பாத துளியை அணிவதே".

தீர்ப்பாரை யாம் இனி எங்ஙனம் நாடுதும்?
அன்னைமீர்!
ஓர்ப்பால் இவ் ஒள்–நுதல் உற்ற நல்நோய்
இது தேறினோம்;
போர்ப்பாகு தான் செய்து, அன்று ஐவரை
வெல்வித்த மாயப் போர்த்

தேர்ப்பாகனார்க்கு இவள் சிந்தை
துழாய்த் திசைக்கின்றதே

[4–6–1]

"மதுவார் துழாய் முடி மாயப்பிரான் கழல் வாழ்த்தினால்
அதுவே இவள் உற்ற நோய்க்கும் அரு மருந்து ஆகுமே".

[4–6–3]

தணியும் பொழுது இல்லை
நீர் அணங்கு ஆடுதிர்; அன்னைமீர்
பிணியும் ஒழிகின்றது இல்லை,
பெருகும் இது அல்லால்,
மணியின் அணி நிற மாயன் தமர் அடி
நீறு கொண்டு
அணிய முயலின், மற்று இல்லை கண்டீர்
இவ் அணங்குக்கே.

[4–6–6]

நாயகியின் தாய் கூற்றாக, காதல் வயப்பட்ட ஒரு பெண்ணின் நிலையைக் கூறும் பாசுரம்:

மண்ணை இருந்து துழாவி
"வாமனன் மண் இது" என்னும்;
விண்ணைத் தொழுது "அவன் மேவு
வைகுந்தம்" என்று கை காட்டும்;
கண்ணை உள்நீர் மல்க நின்று
"கடல்வண்ணன்" என்னும், அன்னே! என்
பெண்ணைப் பெருமயல் செய்தாற்கு
என் செய்தேன், பெய் வளையீரே

[திருவாய்மொழி 4–4–1]

ஒன்றிய திங்களைக் காட்டி
"ஒளிமணி வண்ணனே!" என்னும்,
நின்ற குன்றத்தினை நோக்கி,
"நெடுமாலே, வா!" என்று கூவும்.
நன்று பெய்யும் மழை காணில்,
"நாரணன் வந்தான்" என்று ஆலும்,
என்று இன மையல்கள் செய்தான்
என்னுடைக் கோமளத்தையே?

[திருவாய்மொழி 4–4–4]

"எனது அருமை மகளை இப்படிப் பித்துப் பிடித்தவளாகச் செய்து விட்டானே, மாயன்!" என்று அங்கலாய்க்கிறாள் தாய். இந்தக் கவிதை ஒரு சங்கப்பாடல் போலவே காண்கிறது. கடல் புரண்டு அலைதல், கரிய இரவு நீண்டு கொண்டே போவது, சுடும் தென்றல், இரவில் ஒவ்வொரு ஜாமத்திலும் கூவும் அன்றில் பறவை, உடலை எரிக்கும் நிலவொளி, காதலின் வேதனையை அதிகப்படுத்தும் மாரிக்காலம், என்று சங்க இலக்கியத்தில் காதல் கவிதைகளில் காணும் வர்ணனைகளும் நிகழ்ச்சிகளும் இன்று வரை தமிழ்க் கவிதை மரபாக உள்ளன. காதல் வயப்பட்ட பெண் மெலிந்து தேய்கிறாள், வெளுத்துப் போகிறாள். மேனி பளபளப்பு மங்குகிறாள். காதலனிடம் கைவளைகளைப் பறிகொடுத்ததாகச் சொல்கிறாள். இவை எல்லாம் இலக்கிய மரபுகள். சங்க இலக்கியதைப் பின்பற்றும் தன்னிச்சையான இலக்கிய எதிரொலிகள். காதல் வசப்பட்ட பெண்ணுக்கு நேரும் நிகழ்ச்சிகளான—காதலனை நோவது, தோழியிடம் தன் மன நிலையை வெளியிடுவது, தாயிடம் எதிர்ப்பது, அவளைப் புரிந்து கொள்ளாத ஊராரிடம் சீறுவது, ஊரார் முன்னிலையில் வெட்கமற்று மடல் ஊர்வது, நாயகிக்கு ஏதோ பிடித்து ஆட்டுவதாக நினைத்துச் சிகிச்சை தருவது என்பனவெல்லாம் சங்க இலக்கிய மரபுகளே. இதிலே ஒரு மரபு மீறல். சங்க இலக்கிய மரபுப்படி மடல் ஊர்வது காதலன் தான். ஆனால் நம்மாழ்வாரோ இதனை மாற்றிக் காதலியே மடல் ஊரத் துணிவது போலப் பாடியுள்ளார். திருமங்கை யாழ்வாரும் இந்தப் பாணியைப் பின்பற்றியுள்ளார்.

இந்தக் காதல் கவிதை நாடக நிகழ்ச்சிகளில் பங்கு கொள்ளும் மாந்தர்களும் சங்க இலக்கியக் கவிதைகளில் வரும் பாத்திரங்களைப் போன்றே தாய், செவிலித் தாய், காதலியின் தோழி, காதலன் அவனது தோழன், காதலியின் மனநோயை விரட்ட வரும் கட்டுவச்சி என்று இப்படிப் பலர். இதெல்லாம் ஒரு காதல் கவிதை மரபாகி விட்டது. இந்த மரபுகளை நம்மாழ்வார் தமது பாடல்களிலே அமைத்துத் தமது பக்தி என்னும் வெள்ளப் பெருக்கு நம்மை நோக்கிப் பாய வகை செய்கிறார். மானுடக் காதலை உருவகமாக்கிப் பக்தி செய்யும் ஆழ்வார் பாசுரங்களுக்கும் சங்கப் பாடல்களுக்கும் உள்ள அமைப்பு ஒற்றுமையைக் காண்கிறோம். அவரது வாழ்க்கை வரலாற்றுப்படி இந்தக் கவிதை அறிவு அவருக்கு எப்படி வாய்த்ததோ, புலனாகவில்லை. தமிழ்க் கவிதை வரலாற்று ஆய்வாளர்கள் ஆராய வேண்டியதே இது!

சங்கப் பாடல்களில் பலவற்றிலும் குறிப்பாக உணர்த்துவதே மரபு. நம்மாழ்வார் பாடல்களிலும் இப்படியே. ஓர் உதாரணம்:

மாலையும் வந்தது; மாயன் வாரான்;
மாமணி புலம்ப வல் ஏறு அணைந்த
கோல நல் நாகுகள் உகளும் ஆலோ!
கொடியன குழல்களும் குழறும் ஆலோ!
வால் ஒளி வளர் முல்லை, கருமுகைகள்,
மல்லிகை அலம்பி, வண்டு ஆலும், ஆலோ!
வேலையும் விசும்பில் விண்டு அலறும், ஆலோ!
என் சொல்லி உய்வன் இங்கு அவனை விட்டே?"

[திருவாய்மொழி 9–9–10]

[மாலை நேரம் வந்து விட்டது. வயிறுமுட்டத் தின்ற பசுக்கள் திரும்புகின்றன. எருதுகளுடன் சேர்ந்திருந்த திருப்தியுடன் காணப்படுகின்றன. குழலோசை வல் ஓசையாகக் காதில் ஒலிக்கிறது. மணமுள்ள மல்லிகை, முல்லை மலர்களின் உள்ளே வண்டுகள் பாடி ஆடுகின்றன. கடலோ வானை நோக்கிக் குதித்து ஆர்பரிக்கிறது. நான் என்ன செய்வது, அவன் இல்லையே, மாயன் வரவில்லையே!]

இந்தப் பாடலில் மாலை வருணனை விவரங்கள் பொருள் பொதிந்தவை. அவை யாவுமாகச் சேர்ந்து எழுப்பும் குறிப்பைக் கவனிக்காமல் இருக்க முடியாது. பசுவும் மலரும் கடலும் காதல் சேர்க்கையின் உச்சியின்பத்தையோ, அதை நுகர்ந்துவிட்ட நிலையையோ தெரிவிப்பவை. இவை இப்படி இருக்க ஒரு காதல் நோய்ப்பட்ட தனி உள்ளம் இவற்றின் இடையே எப்படி வாடும்? இதுவே இந்தப் பாடலின் மையக் கருத்து.

இவ்வகையான இயற்கை வருணனையைக் கொண்டு குறிப்பு உணர்த்தும் பாடல்களின் தரமே வேறு; அனுதாப அலை எழுப்பும் பாடல்கள் இல்லை இவை. நம்மாழ்வார் தமது பாசுரங்களில் இயல்பாகவே பல ஒற்றுமை வேற்றுமைகளைக் காட்டி நிறைவான கவி அழகுடன் சொல்லவந்த கருத்தைக் குறிப்பினாலேயே காட்டி விடுகிறார்.

சூழ உள்ள இயற்கை உலகைத் தவிர யாவரும் அறிந்த புராண நிகழ்ச்சிகளையும் தமது பாடல்களிலே ஆள்கிறார் ஆழ்வார்.

மண்ணிலே பல அவதாரங்களில் மாலன் நிகழ்த்திய விளையாட்டுகளை விவரிக்கிறார். இந்த அவதார மகிமை கவிஞரான ஆழ்வாருக்கு மற்றுமொரு வாய்ப்பு அளிக்கிறது. புராண இதிகாசங்களின் காலத்தில் ஒன்றிப்போய், அல்லது ஒரு பாத்திரத்தோடு ஒன்றிப் போய் அந்தச் சூழலில் பிறந்த கவிதைகள் பல. ஒரு கோபியாகி விடுகிறார். தன்னைப் புறக்கணித்துப் பசுவின் பின்னே போய்விட்ட கண்ணனைக் கடிகின்றார். அவதாரங்களில் நேர்ந்த நிகழ்ச்சிகளில் லயித்துப் போய்ப் பாடுகிறார். மாவலி மன்னனிடம் மூவடி மண் வேண்டும் மாய வாமனனாய் வந்தது பற்றி; திடீரென்று அடிமுடி காண முடியாது திருவிக்கிரமன் ஆனது பற்றி; மண்ணையும் விண்ணையும் ஈரடியால் அளந்தது பற்றி; இராமன் வடிவில் காட்டிலே கால் நோவ நடந்தது பற்றி; கடலைக் கடந்து இலங்கையை எரித்து வாள் வலியால் அழித்தது பற்றி; மீண்டும் அயோத்தியின் அரசனாக முடிசூடி உயிர் இனங்கள் யாவும், சிறு புல் உட்பட, அவன்தன் சிறப்பினை அறியச் செய்தது பற்றி; வராக உருக்கொண்டு நீரில் மூழ்கிய உலகை மீட்டது பற்றி; பார்த்தனுக்குச் சாரதியாக இருந்தது பற்றி, பாண்டவர்க்குத் தூது நடந்தது பற்றி என்று எத்தனையோ விவரங்கள் பாடல்களிலே வருகின்றன. இவரது பாடல்களிலே காணும் இந்த நிகழ்ச்சிகளினால் ஒரு கவிதை ஓவிய அழகு மிளிர்வதோடு இறைவனின் அவதார நிகழ்ச்சிகள் மானிட வடிவில் ஆண்டவன் பேணும் எளிமை உறவின் பெருமையும் புலப்படுகிறது. இவை புனிதமிக்கவை ஆகின்றன. இவை வெறும் கவிதைப் பொருட்கள் மட்டுமல்ல; மெய்ப் பொருளின் பகுதியே என்றாகின்றன. இவ்வாறு அமையும் கவிதைகளில் சங்கேதங்கள் கூட ஸ்தூலமாய் நேராகக் தெரிவிக்கும் கருத்துகளாகப் பளிச்சிடுகின்றன. மாறி மாறித் தமது மனநிலைகளையும், புராண பாத்திரங்களின் மன நிலைகளையும் கலந்து, இறைவனின் அவதார லீலைகளையும் சேர்த்து இசைத்து ஆழ்வார் பலவகை அற்புதமான பாடல்களைப் படைத்து விட்டார். இதோ ஒரு பாடல், கடவுள் மீது காதல் வயப்பட்டாள் ஒரு பெண், அவளது அன்புத் தாய், காதலனாகிய கடவுளையே நொந்து பேசுகிறாள்! இரக்கமற்றவனாக இருக்கிறானே இறைவன் என்று புலம்புகிறாள்:

> ஆடி ஆடி அகம் கரைந்து,
> இசை பாடிப் பாடி கண்ணீர் மல்கி,
> எங்கும் நாடி நாடி
> 'நரசிங்கா' என்று வாடி
> வாடும் இவ் வாள் நுதலே. [திருவாய்மொழி 2–4–1]

"நரசிங்கா!" மானுட வடிவும் சிம்ம முகமும் கொண்ட பயங்கர வடிவம். தனது அன்பு மகள், எப்படி இந்தப் பயங்கர வடிவை வேண்டி விரும்பிக் கூவுகிறாள் என்று தாய் வியக்கிறாள். அடுத்து வரும் பாசுரங்களில் காதலனான இறைவன் ஆயிரம் கரத்தானாகிய பாணனை அழித்தது பற்றியும் கம்சனைக் கொன்றது பற்றியும் கூரான செஞ்சுடர் ஆழியான சக்கராயுதம் தரிப்பது பற்றியும் கூறி, இந்தக் காதலன் இரக்கமுள்ள இதயம் அற்றவன் என்று தாய் கருதுவதாகவே பாசுரங்களை அமைத்துள்ளார். ஒரு தாயாகப் பேசும் போதும் தமது நிலையை அவளது வேதனை விழிகளிலே வைத்துக் கண்டு அனுபவித்துப் பாடும் போதும் ஆழ்வார் ஆண்டவன் மீது கொண்டுள்ள காதல் நிலை வெளிப்பட்டு விடுகிறது.

"தகவு உடையவனே!" என்னும்; பின்னும்
மிக விரும்பும் பிரான் என்னும்; எனது
அக உயிர்க்கு அமுதே! என்னும் உள்ளம்
உக உருகி நின்று உள் உளே

திருவாய்மொழி 2–4–6

கவிதையும் நாடகமும் இவ்வாறு இணைந்து வெறும் இலக்கிய வடிவிலிருந்து மேலேறி, ஒரு பக்தனின் இதய ஒலியாக வெளிப்படுகின்றன. "எம்பெருமானது வெற்றிச் செயல்களைப் பேசுதல்" என்று ஒரு முழு திருவாய்மொழியில் [7–4] அவதாரச் சிறப்புகளை நிரம்பப் பாடுகிறார். அவற்றில் சில வெறும் விவர வர்ணனைதான் என்றாலும் கவிஞனின் மனநிலையை விளக்கும் வகையில் அற்புதமாக அமைந்த பாடல்கள்:

ஆழி எழ, சங்கும் வில்லும் எழ,
திசை வாழி எழ, தண்டும் வாளும் எழ,
அண்டம் மோழை எழ,
முடி பாதம் எழ, அப்பன்
ஊழி எழ — உலகம் உண்டவாறே

[7–4–1]

[பிரளய காலத்தில் உலகைத் தனது வயிற்றில் ஏந்திய போது]

ஆறு மலைக்கு எதிர்ந்து ஓடும் ஒலி,
அரவு ஊறு சுலாய் மலை தேய்க்கும் ஒலி,
கடல் மாறு சுழன்று அழைக்கும் ஒலி
அப்பன் சாறுபட அமுதம் கொண்ட நான்றே!

[7–4–2]

[அசுரரும், தேவரும் அமுதத்துக்காகப் பாற்கடலைக் கடைந்த போது எழுந்த ஒலிகள் இடையே அப்பன் அமுதம் கொண்டு வருகிறான்.]

நான்றில ஏழ் மண்ணும் தானத்தவே;
பின்னும் நான்றில ஏழ் மலை தானத்தவே;
பின்னும் நான்றில ஏழ் கடல் தானத்தவே;
அப்பன் ஊன்றி, இடந்து எயிற்றில் கொண்ட நாளே!

[7–4–3]

[வராக அவதாரத்தில் உலகைத் தனது கொம்புகளில் தாங்கிக் கொண்ட போது ஏழ் உலகும் ஏழு மலையும் ஏழு கடலும் அசையாது ஏந்திய பெருமை பேசப்படுகிறது].

நாளும் எழ, நிலம் நீரும் எழ,
விண்ணும் கோளும் எழ, எரி காலும் ஏழ,
மலை தாளும் எழ, சுடர்—தானும் எழ,
அப்பன் ஊளி எழ — உலகம் உண்ட ஊணே!

[7–4–4]

[பிரளய நாளில் எல்லா உலகையும் இறைவன் தன்னுள் அடக்கி வைத்துக் கொண்ட நிலை இது.]

ஊனுடை மல்லர் ததர்ந்த ஒலி,
மன்னர் ஆண் உடைச் சேனை நடுங்கும் ஒலி,
விண்ணுள் ஏண் உடைத் தேவர் வெளிப்பட்ட ஒலி
அப்பன் காணுடைப் பாரதம் கை அறை போழ்தே.

[7–4–5]

[கிருஷ்ண அவதாரத்தில் பாரதப் போரைப் படைத்தவன் சுவைத்த ஒலிகள்]

போழ்து மெலிந்து புன் செக்கரில் வான்,
திசை சூழும், எழுந்து உதிரப் புனலா,
மலை கீழ்து, பிளந்து சிங்கம் ஒத்ததால் —
அப்பன் ஆழ் துயர் செய்து,
அசுரைக் கொல்லுமாறே.

[7–4–6]

[நரசிங்க அவதாரத்தில் மாலை நேரத்தில் நரஹரியாய்த் தோன்றி இரணியனைக் கொன்ற குறிப்பு]

மாறு நிரைத்து இரைக்கும் சரங்கள்
இனநூறு பிணம் மலை போல் புரள,
கடல் ஆறு மடுத்து உதிரப் புனலா—
அப்பன் நீறுபட இலங்கை செற்ற நேரே! [7–4–7]

[இரமாமஅவதார நிகழ்ச்சி]

அன்று மண், நீர், எரி, கால், விண், மலை முதல்,
அன்று சுடர் இரண்டு, பிறவும்;
பின்னும், அன்று மழை, உயிர், தேவும்,
மற்றும் — அப்பன் அன்று முதல்
உலகம் செய்ததுமே. [7–4–9]

[படைப்பின் முதல் நாள் படைத்தான் இவையே]

மேய் நிரை கீழ் புக, மா புரள,
சுனை வாய் நிறை நீர் பிளிறிச் சொரிய,
இன ஆநிரைபாடி அங்கே ஒடுங்க
அப்பன் தீ மழை காத்து,
குன்றம் எடுத்தானே.

[7–4–10]

[கிருஷ்ண அவதாரத்தில் குன்று எடுத்து ஆநிரைகளையும் கோகுலத்தையும் இந்திரனின் கோப வெள்ளமான மழையில் இருந்து காத்தது]

முன்பே குறிப்பிட்டபடி நம்மாழ்வாரின் இறைவன் உருவம் அற்ற அருவம் அல்ல. எத்தனையோ இடங்களில் சொல்லால் விளக்க முடியாத இறைவனை சூட்சுமமாக விளக்கியுள்ளார் இவர். ஆனால் பெரும்பாலும் இவரது கவிதைகளில் அழகும் எழிலும் நிறைந்த பொருளாகவே கடவுளைக் காண்கிறார். பெருமாளின் சங்கையோ சக்கரத்தையோ பற்றிக் குறிப்பிடும்போது ஆழ்வார் பரவசமடைந்து போகிறார். பொன்முடி, தாமரை மலர் போன்ற கண்கள், திருமேனியோ பச்சை மாமலை போலும், கரு நீலக்கடல் போலும், நீருண்ட மேகம் போலும் எழில் நிறைந்ததாம்.

முடிச் சோதியாய் உனது
முகச் சோதி மலர்ந்ததுவோ?
அடிச் சோதி நீ நின்ற
தாமரையாய் அலர்ந்ததுவோ?
படிச் சோதி ஆடையொடும்
பல் கலனாய், நின் பைம்பொன் கடிச் சோதி
கலந்ததுவோ? திருமாலே, கட்டுரையே

[திருவாய்மொழி 3–1–1]

மெய்ப் பொருளை நாடித் தொடங்கிய நீண்ட கடின யாத்திரையில், ஆழ்வாருக்கு இந்த அழிவிலா அழகை அனுபவிக்கும் உணர்வே, எல்லா இடர்களையும் தாங்கும் வலு அளிக்கிறது. அழகு எங்கெங்கே தெரிகிறது!. உலகெங்கும் தெரிகிறது. இறைவன் கோவில் கொண்டுள்ள ஊர்களின் இயற்கைக் காட்சிகளில் கூட இறை எழில் கொஞ்சுகிறது.

'சீர் ஆர் செந்நெல் கவரி வீசும் செழுநீர்த் திருக்குடந்தை செம் மாகமலம் செழு நீர்மிசைக் கண் மலரும் திருக்குடந்தை' [5–8–1,2]
*'தேன் அருந்தி மழலை வரி வண்டுகள் இசைபாடும் திருவல்ல வாழ்'*
[5–9–9]
'சேறு ஆர் சுனைத் தாமரை செந்தீ மலரும் திருவேங்கடம்' [6–10–2]
'பவள நன்படர்க் கீழ் சங்கு உறை
பொருநல் தன் திருப்புளிங்குடி'
[9–2–5]

இந்தக் கோவில்கள் மட்டுமல்ல உலகமே நம்மாழ்வார் தொழுத கோவில் [நம்மாழ்வாரின் தத்துவம்' என்ற அத்தியாயம் காண்க.] உலகத்து இயற்கை எழில் யாவும் அழிவிலா அழகனது சிறப்பைப் பேசுவனவேயாகும். காணும் இடம் எங்கும் ஆழ்வார் இவ்வாறே பார்க்கிறார். தாமரையிலே, நீல நீர் ஆம்பல் மலர்களிலே, கடலிலே, வானிலே, மலையிலே, மழையிலே, என்று உலகில் எந்தப் பொருளும் இறைவனை நினைவூட்டும் பொருளே ஆம். அவருக்கு ஐம்பெரும் பூதங்களான வெளி, காற்று, தீ, நீர், மண் எல்லாம் ஆண்டவனின் வடிவே. மெய்ப்பொருளை தேடிய நம்மாழ்வார் இந்த அடிப்படை அம்சங்களிலே என்றும் உறைபவனின் எழிலைக் காண, அத்தெளிவே உயர்ந்த கவிதையாகி விடுகிறது. இவர் முனிவராகவும் மகானாகவும் இருந்தும் ஓர் கவிஞராகவும் விளங்கினார். இதை உணர்ந்தே 'ஆசார்ய ஹிருதயம்' என்ற வைணவ நூலிலே இவரைப் பற்றிக் இப்படிக் குறிப்பிடுவார்கள் – "ஆழ்வாரைக் கவி என்னும் போதே அவர் ஒரு ரிஷி என்பதும் முனி என்பதும் சொல்லாமலே விளங்குகிறது."

உருவகங்களும் கவிதைப் பொலிவும் இன்றி நம்மாழ்வார் பாடவே இல்லையா என்ன? பாடியுள்ளார். திருவாய் மொழியில் பல

பாசுரங்கள் இப்படியானவையே. அவற்றில் தெரியும் கருத்துகள் பல. பலவகையானவை. இறைவனுடன் முறையிடுதல்; அவனிடமே கேள்வி கேட்டல், அலுப்பு, தன் நிலை பற்றியே ஏமாற்றம், தேடுதலில் தெரியும் தவிப்பு, அறிந்தபின் அடையும் ஆனந்தம் என்று எத்தனையோ உணர்ச்சிகள் ['நம்மாழ்வாரின் தத்துவம்' என்ற அத்தியாயம் காண்க] திருவாய்மொழியின் சில பாசுரங்களிலும் திருவாசிரியப் பகுதியிலும் ஆழ்வார் இறைவன் பற்றியும் இவ்வுலகம் பற்றியும் அப்பட்டமான உண்மைகளைத் தெரிவிப்பதிலும் அதற்கு ஆளும் உவமையிலும் கவிஞரின் தனிப் பண்பு தெரிகிறது. உதாரணமாக 'எங்கும் இருப்பவன் இறைவன்' என்னும் கருத்தை ஆழ்வார் வெளியிடுகிறார். சொல்லும் போதே கவிதைக்கண் பொருள்களை ஒவ்வொன்றாகக் கடந்து கருத்துக்குத் தாவுவதைக் காண்கிறோம்:

பரந்த தன் பரவையுள்
நீர் தொறும் பரந்துளன்;
பரந்த அண்டம் இது என
நிலம் விசும்பு ஒழிவு அறக் கரந்த
சில் இடந்தொறும் இடம் திகழ் பொருள் தொறும்
கரந்து, எங்கும் பரந்துளன்.

[1–1–10]

திட விசும்பு,
எரி,
வளி,
நீர்,
நிலம்,
இவை மிசைபட பொருள் முழுவதும் ஆய்
அவை அவை தொறும்
உடல்மிசை உயிர் எனக் கரந்து
எங்கும் பரந்துளன்,
சுடர்மிகு சுருதியுள் இவை உண்ட சுரனே

[1–1–7]

கற்பனை போலவே கவிதை உணர்ச்சியும் ஆழ்ந்த தத்துவ விளக்கங்களுக்கு இடமளிக்கின்றது. கடவுள் அறிவுக்கு அப்பாற்பட்டவன் என்றும் கருத்தைச் சொல்ல வரும் ஆழ்வார் இந்தப் பாடலில் கவிதை அழகு சேர்க்கிறார்.

துயக்கு அறு மதியில்
நல் ஞானத்துள் அமரரைத் துய்க்கும்

மயக்கு உடை மாயைகள் வானிலும்
பெரியன வல்லன்: [1–3–10]

இவ்வாறு ஒரு சிந்தனைக் கருத்து கவிதை வடிவில் விழுகிறது. உடனே உணர்ச்சி பொங்குகிறது.

புயல் கரு நிறத்தவன்;
பெருநிலம் கடந்த நல் அடிப்போது
அயர்ப்பிலன்
அலற்றுவன்
தழுவுவன்
வணங்குவன் அமர்ந்தே. [1–3–10]

நம்மாழ்வாரை முழுதும் அனுபவிக்க மூலப் பாடல்களைப் பாடிப் பாடிச் சுவைக்க வேண்டும்! இன்னும் ஒன்று. இவர் பாடல்களில் ஆளும் தமிழ்மொழி தென் பாண்டி நாட்டுப் பழகு தமிழும் செந்தமிழும் கலந்த மொழியாகும். இதிலே உள்ளத்து உண்மை உணர்ச்சி பளிச்சென்று தெரிகிறது. அதிலே ஆழமும் தெளிவும் உண்டு. பாடல்கள் யாவும் ஒரே மாதிரி சரளமானவையில்லைதான் — அப்படி இருக்கவேண்டுமா என்ன? — சில பாடல்கள் செவிக்கு விருந்து. கடினமான பாடல்களேயானாலும் அவை சீவனுள்ள பாறை போல, அலை கடல் போல, வலிமையும் ஆழமும் நிறைந்த கருத்துக்களாக விளங்குகின்றன. இவ்வளவோடு நம்மாழ்வார் கவிதைகள் பலவகையான விருத்த யாப்புகளும் வெண்பாவும் கட்டளைக் கலித்துறையும் ஓர் அற்புத ஆசிரியப்பாவும் கொண்ட படைப்பு. இவற்றிலே எங்கும் தேர்ந்த கலைஞனின் கருத்தைத் தேடிப் பார்க்க முடியாது. ஆனால் ஓர் உண்மைக் கவிஞனின் பாடலில் மட்டுமே காணக் கிடைக்கும் வலுவான கவர்ச்சி இவரது வாக்கிலே உள்ளது.

ஆம். நம்மாழ்வார் ஒரு கவிஞரும் கூட. கவியாக வேண்டுமென்ற கட்டாயத்தினால் அல்ல. அவர் உள்ளத்தில் நிறைந்திருந்த ஆன்மிக உணர்வும் அனுபவமும் வெடித்துச் சொல்லாக வெளிப்படும் முயற்சியில் பிறந்ததே அவரது கவிதை.

உடலில் குருதியும் நெஞ்சமும் ஆவியும் இணைந்த உணர்வுகள்; இதனுடன் உலக இயற்கையின், மானுட இயல்பின் ஆயிரமாயிரம் நுணுக்கங்களைக் கொண்ட உவமையும் உருவகமும் நிறைந்த கவிதை இவர் கவிதை. இவரது கவிதைகளால் தமிழ் இலக்கியத்துக்கு ஒரு புதுப் பரிமாணம் பிறந்தது. மண்ணும் விண்ணும் ஒரு சேர, மானுட வாழ்வு என்பது ஒரே நேரத்தில் மண்ணில் தேடும் முயற்சியும் விண்ணை அடையும் மகிழ்ச்சியும் கலந்ததாயிற்று!

தமிழில் ஆன்மிகக் கவிஞரிடையே நம்மாழ்வார் சிறந்த ஒருவர். ''புலவர்களே, வாருங்கள்! பயனுள்ள வாழ்வு வாழ கரங்களால் மெய் வருந்தி உழைப்பீர்! தனிமனிதர் புகழ் பாடுவதேன்? உலகிலே பெரியவர் யார்? அப்படி யாரும் இல்லையே. உங்கள் உங்கள் இஷ்டதெய்வத்தைப் பாடுங்கள்!

அமரர் பேராசிரியர் அ.சீனிவாச ராகவன் ஆங்கிலத்தில் எழுதியுள்ள இந்த நூலிலே ஆழ்வார்களை, முக்கியமாக நம்மாழ்வாரை அறிமுகம் செய்து, அவரது நான்கு இலக்கியங்களையும் விரிவாக விவரிக்கிறார். நம்மாழ்வாரின் ஆன்மிக வாழ்வு, மெய்ப்பொருளை நோக்கி அவர் கொண்ட யாத்திரை, அவரது கவிதைப் பெருக்கு என்றெல்லாம் விவரித்து நம்மாழ்வாரின் தத்துவம் பற்றியும் கவிநயம் பற்றியும் சொல்லுகிறார்.

வாழ்நாளெல்லாம் கவிதையுடனும் நம்மாழ்வாரின் இலக்கியத்துடனும் ஈடுபட்டிருந்த ஒரு ஆங்கிலப் பேராசிரியரின் எழுத்து இது. சிறு நூலிலே பெரும் பக்தரும் கடவுள்வெறி பிடித்த பாடகரும் உணர்ச்சிக் கவிஞருமான நம்மாழ்வாரின் சிறப்பை வெளிப்படுத்துகிறார்.

NAMMALVAR (Tamil) Rs.15

அட்டைப்படம் : தமிழ்நாடு அரசு வழங்கிய
போட்டோ படத்திலிருந்து.

ஓவியம் : 'ஆனந்த்'

ISBN-81-7201-389-2